

# ஸப்தகிரி

செப்டம்பர், 1984

விலை ரு. 1/-

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்





# உங்களுடன்....

ஒருவன் ஆபத்திலிருக்கும்போது அதிலிருந்து மற்றொருவன் அவனைக் காப்பாற்றிடும் போது, முன்னவனுக்குப பின்னவன் தெய்வமாகத் திகழ்கின்றான். அவனைச் சில சமயம் வழிபடவும் செய்கின்றான். இது மனிதன் மனிதனுக்குக் காட்டிடும ஒரு நன்றியுணர்வின் வெளிப்பாடேயாம. இதே உதவியினை அவன் ஓர் ஊருக்குச் செய்திடும் போது அவன் ஒரு தலைவனாகின்றான் ஒரு நாட்டுக்குச் செய்திடும்போது ஒரு தன்னிகரில்லாத் தலைவனாகின்றான ஆயினும், அத்தலைவனது, தீய சக்திகளை ஒடுக்கிடும் திறமை, நல்லவர்களைக் காப்பாற்றும் ஆற்றல் ஒரு எல்லைக்குள்ளேயே நின்று விடுகின்றன காலம, இடம போன்றன அவனைக்கட்டுப்படுத்திவிடுகின்றன இவ் இயற்கை நியதிகளுக்கு அப்பாற்பட்டு உலகுயிர்களைக் காப்பாற்றிடும திறமை ஒருவனுக்கே உண்டு அவன்தான் பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் பரமபொருள் அவன, இப்பூவுலக மக்களைக் காத்திட நம்மிடையே எடுக்கும் ஒரு தோற்றலைத்தான் (பிறவியைத்தான்) நாம 'அவதாரம் எனக் கூறுகிறோம். புராணங்கள் மற்றும்கீதையின் கூற்றுப்படி, நல்லோரைக் காப்பாற்றவும, தீயோரை அழிக்கவும், தர்மத்தை நிலைநாட்டவும், ஏன் மற்றைய தெய்வங்களைக் காப்பாற்றிடவும், நல்லோருக்கும் முக்தி அளிக்கவும நமக்கு முன்போ, நமமிடமிருந்தோ அவன் அவதாரம் மேற்கொள்ளுகின்றான இறைவன் எளிமை, கருணை ஆகியவற்றின இருப்பிடம அல்லவா. ஆகையாலதான நம்மைக் காத்திட, நாம் அவன நிலைக்கு உயர்ந்திட, நமக்காக அவன தாழ்ந்து வந்து தன அபயக் கரத்தினை நீட்டுகின்றான். இவவகையில் அவன எடுத்துககொண்ட அவதாரங்கள இருபததிரண்டு என புராணங்கள் கூறினாலும, அவற்றில் பத்து மட்டுமே முக்கியமாகக் கொள்ளப்படுகின்றன. தீயோரை அழிப்பதுதான அவதாரத்தின அடிப்படை நோக்கமல்ல. அடம பிடிக்கும் குழந்தையை அதட்டி அடித்து அரவணைததுக் கொள்ளும் ஒரு தாயைக் காட்டிலும சாலப பரிவாக இருந்து அவனைத் திருத்தவே அவன திருவுள்ளம் கொள்ளுகின்றான். ஒவ்வொரு அவதாரத்தின பின்னணியாக பல லௌகீக, தத்துவக் கருத்துக்கள பொதிந்துள்ளன அவை இன்று பல விஞ்ஞான உண்மைகளுக்கு ஓர் ஆராயச்சிப பாடங்களாக விளங்குகின்றன என்பதைக் கற்றோர் உணர்வர்.

பல்வேறு யுகங்களில பல்வேறு அவதாரங்கள் இறைவன் மேறகொண்டதை வேத புராணங்கள மூலம அறிந்து கொள்ளும் நாம, இன்று அப்பரம்பொருளின் அருமை பெருமைகளை, கலியுக அவதாரமான ஏழுமலையானின் 'அர்ச்சாவதார' உருவததில் கண்டு அனுபவிக்கின்றோம். அவனுடைய அருள் உள்ளத்தின் அருமையினையும், தெயவீகத் தன்மைகளின் தனிததன்மையினையும் நம்மிடையே இருந்தோர், இருக்கின்றோர் அனுபவித்ததை நாம் அறிய நேரிடும் போதெல்லாம் விஞ்ஞானமும ஒரு புதிராக நமக்குத் தோன்றும் வேதப் புகழும், புராணப் பெருமையும், இதிஹாஸ மாண்பும, இலக்கிய உயர்வும, சரித்திரச சிறப்பும் கொண்டு விளங்கிடும் திருமலையில், கலி தீர்க்கும் நாயகனாக, அருள் புரியும் பாற்கடலாக நின்ற வண்ணம் அருட்கோலம புரிந்திடும் நெடியோனின் வருடாந்திர பிரமமோற்சவம் இம்மாத இறுதியில கொண்டாடப்பட உள்ளது.

வருடத்திற்குப பலமுறை பிரமமோறசவம் நடைபெற்று வந்த இபபெருமைமிகு திருமலையில் கொண்டாடபபடும இபபிரமமோறசவத்திறகான தகுந்த ஏறபாடுகளை கோயில் மேலாண்மை மேற்கொண்டுள்ளது. மகா விஷ்ணுவின் ஓர் அமசமாக கருதபபடும அன்னையின நவராத்திரி விழாவும் பிரம்மோறசவத்தின்போது கொண்டாடபபடுவது சாலச் சிறப்பாகக் கருதபபடுகிறது. சூர்ய மண்டலத்தின நாயக நாயகிகளாக விளங்கி, மாதவனின் மாட்சிமையினை ஸ்ரீமத் பாகவதம கூறிட, அன்னையின அருமையினை ஸ்ரீதேவி பாகவதம விளக்குகிறது. அன்னையும, அப்பரம்பொருளினைப போன்றே, வராஹியாகவும், சிம்ம முஹியாகவும பல அவதாரங்கள் பெற்றிருப்பது நமமைச் சிந்திக்கவும அகமகிழவும் செய்கின்றது

வேற்றுமையில் ஒற்றுமை கண்டு ஒருமைப்பாட்டுடன வாழ்ந்தால்தான் நமககும நமது சமயத்திற்கும் ஒரு புது மறுமலர்ச்சி தோன்றிடும் என்பதைக் கூறாமல் கூறிடும வண்ணம், அவவைகுந்தநாதன் ஸ்ரீவேங்கடேஸ்வாராக - பாலாஜியாக இத்திருமலையில் கோயில் கொண்டு, சமூக, பொருளாதார, இட, இன, சமய வேறுபாடின்றி எல்லோரையும் தன் அருட்பார்வையால் ஈர்த்துக் கொண்டு நாளும் திருமலையில் திருவிழா வைபவத்தை ஏற்படுத்தியுள்ளான். இதனால் இத்திருமலையில தங்கும் அந்தக் குறுகிய காலத்திலாவது மனிதனை அவன் தன் துன்பங்களை மறக்கச் செய்து, அவனைச் சிந்திக்க வைத்து இறைவன் - பக்தன் எனும் உறவினை இறுகச் செய்து வருகின்றான். இத்தகு பெருமைமிகு ஏழுமலையானின் இப்பிரம்மோற்சவமும் உண்மையான ஒரு சமூக சீர்திருத்த விழாவாக இருப்பதை நாம் அனுபவ ரீதியாக அறிந்து கொள்ள, நம்முடைய பிரச்சனைகளை சற்றே மறந்திட நாமும் நம் உற்றார் உறவினரோடு திருமலைக்கு வருகை புரிந்து ஒரு பெரும் வேள்வியாகக் கருதப்படும் இபபிரம்மோற்சவத்தைக் கண்டுய்வோமாக.

# ★ ★ இறை வழிபாடு ★ ★

இதுவே பொருள்என்று எவர்எவர்
சொன்னுலும் ஏற்பது எது?
அதுவே பொருள்என்று அறிந்து
கொண்டேன்; அப்பொருள் எவர்க்கும்
பொதுவே என்ருலும பொருந்தும;
அனைத்தும் பொருந்தி நிற்கும்;
கதிஎன்று அடைந்தவர் யார்க்கும்
கதியது ஆம் தொல்முதலே.

உலகில் மனிதர்களாகத் தோன்றிய நாம் அரும்பயன் ஆயும் அறிவினர் ஆதல் வேண்டும் என்பது சான்ருேர் அனைவருக்கும் ஒப்ப முடிந்த முடிவாகும். பெறுதற்கு அரிய பயன் அரும்பயன் ஆகும். அரும் பயன் என்பதில் நாட்டம் உண்டாவதும் அருமை; நாட்டம் உண்டாலுைம் அப்பயனை அறிவது அருமை. ஒரோ வழி அறிவது கூடுமாயினும் அப்பயனைப் பெறுவது அருமையினும் அருமை. நாட்டம், அறிவது, பெறுவது என்ற மூன்றும் அருமையானவை என்பதை உணர்த்தப் பொதுவாக அரும்பயன் என்றும், இத்தகைய அறிதற்கு அரிய பயன்களை ஆராயவல்ல அறிவினை உடையார், மிக்க பயன் உடைய அல்லாத சொற்களைச் சொல்லார் என றும் வள்ளுவர் பெருமான்,

'அரும்பயன் ஆயும் அறிவினுர்
சொல்லார்
பெரும்பயன் இல்லாத சொல்'
கு—198

என்ற குறட்பாவில் குறிப்பிட்டுள்ளார்.

எல்லோரும் பயனுடைய செய்திகளைச் செய்ய ஆசைப்படுவார்கள். அதுவும் அரும்பயன் தரும் செய்திகளைத் தவருது செய்வர் எனறே கருதுகிருேம். அங்ஙனமாகவும், அறிவுக்கு ஆதாரமாகிய ஆன்மா என்று சொல்லபபடும் சீவன், தனக்குள்ள பயனில் பெரும்பாலும் ஈடுபடாமையும்; ஈடுபட்டாலும பெரும்பாலும் அறியாமையும், அறிந்தாலும் பெரும்பாலும் பெருமையும் யாது காரணம் பற்றி என்பதனை நோக்க வேண்டும்.

அறிவு மயமான ஆனமா தனித்து இயங்குவது ஒன்று அன்று. தன மனம் மொழி மெய்களால் செய்த நல்வினை தீவினைகளுக்கு ஏற்ப ஏதேனும் ஓர் உடலோடு இணைந்தே உலகில் இயங்குவதாகும். அறிவு மயமான ஆனமா சடமான உடம்பின் தொடர்பு கொளளவே, உடமபு ஆன்மாவின் அறிவைக் குடத்துள் இடப்பட்ட விளக்கினைப் போல ஒளி பரவாமல் மறைககும. அதனேடு ஆன்மாவுக்கு அறிவின்மை, திரிபுணர்வு, ஐய உணர்வு முதலியவற்றையும் உண்டாககும். எனவே, அறிவும் அதன விளைவான நலனும் இயல்பாகக் கொணட ஆன்மா, வினை வயத்தால் தனக்குக் கிட்டிய உடலாம் கூட்டில் அடைபட்டதும் அறிவும் நலனும் மறைக்கப்பட்டுப் பொய் நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் மேற்கொள்ளும் என்பது. இதனை ஓர் எடுத்துக்காட்டு வாயிலாக உணரலாம.

நீரின் இயல்பான தன்மை குளிர்ச்சி. அதனை ஒரு குடத்தில் பெய்து அடுப்பில் ஏற்றி விறகிடை வெந்தீ மூட்டின், நீரின் இயல்பான தன்மைக்கு மாறுக அதற்கு வெம்மையும் அசைவும் ஓசையும் முதலிய மாறுபாடுகள் உணடாதலைக் காணகிருேம். குளிர்ந்த நீர் போன்ற ஆன்மா உடம்பாகிய குடத்தில் புகுத்தி, முக்குணங்களாகிய விறகினுல் சூடேறறப்படுமபோது தன இயல்பு கெட்டு, தனக்கு இதற்கு முன் இல்லாத தாபம் கொணடு சுவர்க்கம, நரகம், பூமி முதலிய தானங்களில் அலைந்து பல மாறுதலகளுக்கு ஆளாகின்றது.

எனவே, உடல் தொடர்பினுல் ஏற்படும மாறுபட்டால் அறிவு மயமான ஆனமா பெரும்பயனில் நாட்டம் கொள்ளுதலும், அதனை அறிதலும், பெறுதலும அரியவாயின. எனினும், ஆனமாவுக்கு இயல்பாவது அறிவு. அறிவு மயககம் என்பது உடல் தொடர்பினுல் இடையே வந்தது ஆகும். இயற்கை அறிவுக்கு, இடையே வநத செயற்கை மயக் கத்தை வெல்லும் ஆறறல உண்டு. இதனை,

'வஞ்சமும் களவும் வெஃகி, வழிஅலா
வழிமேல் சென்று
நஞ்சினும் கொடியர் ஆகி, நவை
செயற்கு உரிய நீரார்
அஞ்செனும் அரக்கரை ஒருவ ஞம
அறிவனே வெல்லும தரத்தன்'

என்பர் சான்ருேர்,

அரும்பயன் ஆயும் அறிவிஞர்
சொல்லார்
பெரும்பயன் இல்லாத சொல்.
(குறள் 198)

அரும்பயன் - அறிதற்கு அரும் பயன், அஃதாவது நாட்டஙகொளற்கு அரும்பயன், பெறுதற்கு அரும்பயன் என அறிதற்கு முனனும் பின்னும் கூட்டி விளக்கம் கொள்ளத்தக்கது.

ஏந்தூர் சடகோப ராமாநுஜன்,
புதுச்சேரி-4.

இன்னும் 'அரும்பயன் ஆயும அறிவிஞர்' என்ற தொடரைக் கூர்ந்து நோக்கின, ஆன்மா தான் புகக சடமான உடம்பின் தொடர்பால் அரும் பயனிடம நாட்டங் கொள்ளுதலும் அதனை அறிதலும் பெறுதலும் அருமையே ஆயினும், இயற்கையான அறிவுடைய ஆன்மா இடை வந்த இச்செயற்கை மயக்கை நீக்கி நாட்டங்கொள்ளவும் பெறவும தேவைப் படும் அறிவு ஆற்றலை உடையது என் பதும் போதரும்.

அரும்பயன-வீடு பேறும, மேற் கதிச் செலவும முதலாயின என்ருர் பரிமேலழகர்.

எனவே பயன் எனபது வீடு பேறு, அது தனக்கு மேமபட்டது இலலாத கதிக் கண் சென்று அடைவது; அந்நிலை எய்த முக்குண வசப்படுத்தும் உடல் தொடர்பு ஆன்மாவுககு அடியோடு நீங்குதல் வேண்டும்; அந்நிலை இறைவன திருவருள் பெற இறை வழிபாடு இன்றியமையாதது; வீடு

(45-ம் பக்கம் பார்க்க)

# நஞ்சன்கூடு நஞ்சுண்டேஸ்வரர்

திரு. என். சந்திரசேகரன்
திருச்சி-17

தேவர்களும் அசுரர்களும் மந்தர மலையை மத்தாகவும், வாசுகியைக் கயிறாகவும் கொண்டு பாற்கடலைக் கடைந்தனா. கடையும் போது வாசுகி விஷத்தைக் கக்கிற்று. விஷ ஜ்வாலையால் பீடிக்கப்பட்ட தேவர்கள் சிவபெருமானைச் சரணடைந்தனர். தஞ்சமடைந்தவர்களைக் காக்க அடியாாககு அமுதான சிவ பெருமான அவ்விஷத்தை உண்ண அவ்விஷயம் அவரது தொண்டையில் தங்கி சிவபெருமானை நீலகண்டராக்கியது. சிவபெருமான் இவவாறு விடமுண்டகணடராக, நஞ்சுண்டேஸ்வரராக இருந்து அருள்புரியும் தலமே கர்நாடக மாநிலததிலுள்ள நஞ்சன்கூடு. இத்தலம் கரளபுரம் என்றும் அழைக்கப்படுகிறது.

மைசூரிலிருந்து சுமார் 20 கி. மீ. தொலைவிலுள்ள இத்தலத்திற்கு மைசூரிலிருந்து ரயில்களும் பஸ்களும் உள்ளன. தமிழகத்திலிருந்து இத்தலததிற்குச் செல்ல வேணடுமென்ருல் சததி (சத்தியமங்கலம்)—மைசூர் பஸ்ஸில் செல்லலாம். ஆலயம் பஸ் நிலையத்திலிருந்து சுமார் ஒன்றரை கி. மீ. தொலைவிலுள்ளது. ரயில் நிலையத்திலிருந்து ஆலயம இன்னும் சமீபததிலுளளது.

தூரத்தில் வரும போதே தமிழகப் பாணியிலுள்ள உயர்ந்த கோபுரம் தங்கக் கலசங்களுடன் காட்சியளிக்கிறது; நமக்குக் கோடி புண்ணியத்தை அளிக்கிறது. தீர்த்த விசேஷமும் பெறற இநத ஆலயததிறகு முன் கபில நதி ஒடுகிறது. மேற்றிசையிலிருநது நாம கோவிலுக்கு வரும் போது சுற்றிலும் மண்டபத்துடன் கூடிய வெளி மதிலைக் காணலாம். மதிலின் மேல் பல சிவ மூர்த்தங்களைக காணலாம். வடக்கு மதிலின் மேல் கணபதியின பதினாறு மூர்த்தங்களையும், மற்ற மதில்களின் மேல் சிவனின் பராக்ரமங்களை விளககும் பலவேறு சிவமூர்த்தங்களையும் காணலாம்.

வடககு மதிலைச் சுற்றிக் கொண்டு நாம் கோயிலின் கிழக்கு வாசலில் நுழையலாம். நுழைந்தவுடன் நம் கண்களைக கவர்வது உயர்ந்த நவரங்க மண்டபம்தான. மண்டபத்தின் இடப்புறமாக நாம் வலம் வந்து சன்னிதிக்குச செல்லலாம். நாம் வலம் வரும் போது இடப்புறமாகக் காட்சி தரும் 36 சிவபக்தர்களைத் தர்சித்துக் கொள்ளலாம். இக்காட்சி இத்தலத்திற்கே உரிய சிறப்பாகும். சிவனடியார்களின் தர்சனத்திற்குப் பின் நாம் சிவ சன்னிதியில் நுழையலாம்.

ஸ்ரீ நஞ்சுண்டேஸவரவர் இத்தலத்தில் ஸ்வயம்பு மூர்ததியாக கவச நாகாபரணங்களுடன் நமக்கு அருள் பாலிக்கிருர். மூலமூர்த்திக்குப் பின் பக்கத்தில் சூரிய சக்கரம் உள்ளது. முந்தைய யுகத்தில் தேவர்களுக்கு அருள் பாலித்த பெருமான் இந்த யுகத்தில் முஸ்லீம் மன்னன் திப்பு சுல்தானுக்கும் அருளியுள்ள வரலாறு நம்மை பக்திப் பரவசப்படுத்துகிறது. திப்புசுல்தானின் யானை கண்நோயால் பீடிக்கப்பட்டிருந்தது. எவராலும் தீர்க்க முடியாத கண நோயை மூக கண்ணனும் நஞ்சுண்டேஸ்வரர் தீர்த்துவைப்பார் என்று பலர் சொல்லக்கேட்ட சுல்தானும் முழு நம்பிக்கையுடன் வேண்டிக் கொண்டான். 48 நாட்களில் யானை குணமடைந்தது. திப்புவும் மகிழ்ச்சியுடன் விலையுயர்ந்த ஆபரணங்களையும், ரத்ன மாலையையும், ஒரு மரகத லிங்கத்தையும் இந்த ஆலயத்திற்கு அளித்தான். நாம் தமது உடற்பிணி, மன அழுக்கு நீங்க நஞ்சுண்டரைப் பிரார்தித்துக் கொண்டு வெளியே வரலாம். கர்ப்பகிரஹத்திறகு வெளியே வலப் புறத்தில் துர்க்கையையும், தெற்கு



நஞ்சுண்டேசுவரர் கோயில்
நஞ்சன்கூடு.
புகைப்படம்: ஜெகதீஷ்

நோக்கிய உத்ஸவ மூர்த்தியையும் தர்சித்துக் கொண்டு உட்பிராகாரத்தில் வலம் வரலாம்.

வலம் வரும்போது மூன்றும கிருஷ்ணராஜர், அவரது மனைவியரின் சிலைகளைக் காணலாம். ஹொய்சளர்கள் சோழர்கள் காலத்திலிருந்தே தொடங்கி விரிவடையததொடஙகிய இக்கோவிலுக்கு கராசூரி நஞ்ச ராஜன், அமைசசா பூர்ணையா போன்றோரும் திருப்பணி செய்துள்ளனர். இவ்வாலய கோபுரததை மூன்றும கிருஷ்ணராஜர் நிர்மாணித்தார் என்று இக்கோவில் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. கிருஷ்ண ராஜா சிலைக்கு எதிரில் ஏழுதலை நாகம குடை பிடிக்க அதனடியில் காடசி தரும் சுப்ரமணியரையும் தர்சித்துக் கொள்ளலாம். வலம் வரும்போது கணபதியையும், வடக்கு பிராகார மூலையில் ஸ்ரீ சாரதாமபாளையும் தரிசிக்கலாம்.

உட்பிராகாரத்தை வலம் வந்து வெளியே வந்தவுடன் வலப்பக்கத்திலுள்ள பார்வதியம்மன் சன்னிதிக்குச் செல்லலாம். நான்கு திருக்கரங்களுடன் கருணை பொங்கும் விழிகளுடன் கடாட்சிக்கும் அம்பிகையை வேண்டினுல் அனைத்தும் பெறலாம. அம்மன சனனிதிக்கு வெளியே வலப் பக்கத்தில்தான் திப்புசுல்தான் வழங்கிய மரகதலிங்கம் உள்ளது லிங்கம் சுமார் ஒரு அடி உயரமுள்ளது. அன்னையைத் தாசிததபின் பிராகாரததிலுளள ஆதிகேசவமூர்த்தி, தாணடவ மூாத்தி (நடராஜா) நவக்ரஹஙகளையும் தரிசித்துக கொண்டு வெளிப் பிராகாரத்திற்கு வரலாம்.

வடக்கு வெளி பிராகாரத்தில் சிவலிலைகளை விளக்கும் 25 சிலா மூர்ததஙகள் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன. இது இததலத்திறகே உரித்தான சிறப்பு அமசமாகும. சந்திர சேகரர், ஸோமாஸ்கநதர், கங்காளர் கர்மதஹனர், சுகாசனர் சஙகர நாராயணர், அர்ததநாரி, ஜலநதராரி மூர்த்தங்கள நம் மனதைக் கொளளை கொள்ளும்வண்ணம் அமைந்துள்ளன. இது தவிர காலனை சமகரிக்கும் கால சம்ஹார மூர்த்தியாகவும், சண்டேசருக்கு அருளும சண்டேச அனுக்ரஹ மூர்த்தியாகவும், முப்புரம் எரிசெய்த அதிதீரராக திருபுராரியாகவும் சிவ பெருமான் நமககுப் பல ரூபங்களில் அருள் புரிகிறார். வடக்கு பிராகாரககோடியிலுள்ள தக்ஷிணாமூர்த்தி நல்ல காத்ரமான வடிவம் கொண்டு நமகககு ஞானோபதேசம் செய்கிறார்.

கோவிலை விடடு வெளியே வரு முன் நவரஙக மண்டபத்தின் வலப் பக்கத்தில் மிகப்பெரிய நந்தியைக் காணலாம. வெளியே பார்தத வண்ணம அமைந்திருக்கும் இந்நந்தி சுமார் முன்னூறு வருஷங்களுக்கு முன் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

இநத க்ஷேத்ரத்தில்பரசுராமருக்குச் சிவபெருமான் காடசி கொடுத்ததாக புராணங்கள் கூறுகின்றன. கோவிலிலிருந்து சுமார் 2 கி.மீ. தொலைவிலுள்ள கூர்ணவதி,குண்டலு நதிகளின சங்கமப் பிரதேசத்தில் பரசுராமா ஆலயம் ஒன்று அமைந்துள்ளது. இங்குள்ள மண் சரும வியாதியை நீககும்.பரசுராமரைத்தரிசித்த பின்னரே நஞ்சுண்டேஸ்வரரை தர்சிப்பது சம்பிரதாயமான பழக்கம்.

இக்கோவிலில் ஸ்ரீகண்டமுடி உத்ஸவமும் பிரம்மரதோத்ஸவமும் விசேஷமானவை. ஸ்ரீ கணடமுடி உத்ஸவம் பஙகுனி மாதத்தில வருகிறது. இதைத் தொடர்ந்து ரதோத்ஸவம் வருகிறது. பஞச மூர்த்திகளுக்கும தனிததனி ரதங்கள் உள்ளன. தமிழநாட்டு ரதங்களைப் போலல்லாமல் உயர்நது குறுகிய வடிவில் ரதங்கள அமைநதுளளன.

பல அரசர்களால் விஸ்தரிக்கப்பட்டுள்ள இவ்வாலயத்தில் எழுந்தருளியுள்ள விடமுண்டகண்டர் தேவர்கள் முதல் திப்புசுல்தான் வரை வேண்டியவர்களுக்கு அருளும் கருணாமூர்த்தியாக விளங்குகிறார். நாமும் நஞ்சுண்ட மூர்த்தியைத் தரிசித்து வேண்டிய நலன்களைப் பெறலாம்.



## திருப்பதியில் தங்கு வசதி காட்டேஜுகளின் கட்டண விவரங்கள் (நாள் ஒன்றிற்கு)

**ஸ்ரீவேங்கடேஸ்வரா தர்மசத்திரம் :**

| | |
|---|---|
| இரண்டு படுக்கைகளைக் கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 20-00 |
| நான்கு படுக்கைகளைக் கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 25-00 |
| ஒரு படுக்கையும், மேசை நாறகாலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 15-00 |

**ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி :**

| | |
|---|---|
| இரணடு படுக்கைகளையும், குளிர்ச்சாதனம, மேசைநாற்காலி வசதிகளைக் கொணட அறை. | ரூ: 50-00 |
| ஒரு படுக்கையும் குளிர்ச்சாதனம் மற்றும் மேசை நாற்காலி வசதிகளைக கொண்ட அறை: | ரூ. 30-00 |

**ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி :**

| | |
|---|---|
| இரண்டு படுக்கைகளைக் கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை: | ரூ. 20-00 |

# ✠ ✠ ✠ கிரஹ சங்கமம் ✠ ✠ ✠

ஒரு சில கிரகங்கள் ஒரு ராசியில் கூடி இருப்பதறகு கிரஹ சங்கமம் *Combination* என்பதாகும். ஒன்றுக்கு மேற்பட்ட கிரகங்கள் கூடும் போது சுபாசுப பலன் ஏற்படும். கேந்திர திரிகோணத்தில் கூடிய கிரகங்கள் நற்பலன் நல்கும். 6, 8, 12ல கூடிய கிரகஙகள் தீயப் பலனைத தரும். சுப கிரகங்களான குரு சுக்கிரன் புதன் சேர்நதால் சரஸ்வதி யோகமாகும். கவிபாடும திறமை, கணித வித்தை, அதிக செல்வம், அரசு பதவி அளிக்கும். கொடிய கிரகங்களான ராகு கேது செவ்வாய் சனி சூரியன ஒரு ராசியில் கூடி இருநதால் அந்த ராசி பலஹீனமாகி கெட்டப் பலன்கள் ஏற்படுகிறது.

"ஜென்ம லக்கினத் திலேந்து பேருமே
கூடிநிற்க
உண்மையாய் ராஜயோக முண்டென்
கமறறுங் கேளாய்"

ஜென்ம லக்கினத்தில் ஐந்து கிரகங்கள் கூடி நின்று லக்கினம் பலமடைவதால் ராஜயோகம் ஏற்படுகிறது. 9, 10ல் கூட்டமாய் கிரகஙகள் இருப்பது மகா ராஜயோகமாகும். 'அஞ்ச நால் பேரும கூட அவர்க்குமே பகையுமில்லே' எனறூா. 9, 10ல் கூட்ட கிரகங்களுககு பகை கிடையாது. சந்திரன் பலமாகி சநதிரனுக்கு 11ல் கூட்டமாய் கிரகஙகள் இருப்பது விசேஷமாகும். சகல வல்லவனய் தோணும் உலகுதனை யாள்வான்.

சந்திரனுடன் எந்த கிரகம கூடினும் சங்கம பலத்தை பெறுவதால் சந்திரனுடன் கூடும் கிரகம் பலம் பெற்றுத் திசைகளில் யோகத்தை பரிமளிக்கும். ஆனல் சூரியனுடன் சேருங்கிரகங்கள் அஸ்தங்க தோஷமடைவதால் பலஹீனமாகும். அதனல் சூரியனுடன சேரும் கிரகம் செயலற்றுப் பலன தராமல் போய் விடுகிறது. ராகு கேது சம்மந்தப் பட்ட கிரகமும் தீயப் பலன்களை தருகிறது. ராகு கேதுவுடன் சேர்நத கிரகத்தின வர்க்கம் பலமிழந்து பாதிககப்படுகிறது. ராகு கேதுவுடன் சூரியன் சேர்ந்தால் தந்தை சுகம குறைவு. சந்திரன் சேர்நதால் கஷ்ட பிரசவம், தாய் சுகம் கெடும. செவ்வாய் சேர்ந்தால் சகோதர சுகம் கெடும. புதன சேர்ந்தால மாமன் வழிக்கு தீயப் பலன் தரும். குரு சோநதால் புத்திர தோஷம். சுக்கிரன் சேர்ந்தால் மனைவிக்கு நோய் நொடி, தீயப்பலன், பிற ஸ்திரி சம்பந்தம் தரும்.

ராகு கேதுக்களுடன் நீச்சகிரகம் சேர்ந்தால் நீச்ச பங்க உச்சயோகமாகும். ராகு கேது ஏழுக்கு ஏழாய் 90 டிகிரியில் அமைந்திருப்பர். ராகுவுடன் அல்லது கேதுவுடன் ஒரு நீச்ச கிரகம் சேரும் போது நீச்ச கிரகத்திற்கு தான் நின்ற வீட்டிற்கு ஏழாம் வீட்டு சம்மந்தம் ராகு கேது அச்சால் கிடைக்கிறது. ஒரு கிரகம் நீச்சமடையும் ராசிக்கு ஏழாவது ராசி அந்த கிரகத்திற்கு உச்ச ராசியாகும். உச்ச வீட்டு சம்மந்தம் ஒரு நீச்சகிரகத்திற்குக கிடைக்கும்போது நீச்சபலம் குறைகிறது. நீச்சனுடன் சோந்த ராகு கேதுக்கள் நீசச கிரகத்திறகு உச்ச ராசி சம்மந்தத்தை கொடுபபதால ராகு கேதுவுடன் சங்கமம் பெற்ற நீச்ச கிரகம் நீச்ச பங்க ராஜயோகத்தைத் தருகிறது.

சூரியாதி கிரகங்கள் சங்கமமாகும் பலனை பார்ப்போம். சூரியன் சந்திரன் சேர்ந்தால் பொய் பேசுவார், சட்டத்தை மீறுவார். மாயாஜாலவன் பராக்கிரமம் உண்டு. கூர்மையான புத்தி, கணவான், தனவான. 10ல் இருந்தால் ராக்ஷஸ குணம், விஷம சுபாவம, சத்துரு ஜெயம் செய்வார். தேய்மதியானல பலன் இல்லே. சூரியன் செவ்வாய் சேர்ந்தால் கபடன், கொடிய சேஷ்டை, வஞ்சகன், பிறருக்கு இம்சை கொடுப்பான், பொய் பேசுவான், கொலே, விபச்சாரம், சோரம், சணடாளன், பாவியாவான்.

சூரியனும் புதனும் சேர்ந்தால் புதாதித்திய யோகம். அதிக அறிவாளி சாமர்ததியசாலி, யூகவான், மண்டலம் புகழ வாழ்வான், வித்வான். "விளேயும் புதனும் சூரியனும் விரும்பி எட்டு நான்கு ஒன்றில் விளேயக் கூடின் மன்னவனும்" சூரியனும் குருவும் சேர்ந்தால் மந்திரி யோகமாகும். பணமும் புதை பொருளும் உண்டு. ஆசிரியர் குருவாய் இருப்பார். அதிசய காரியம் புரிவார். 1, 11ல் கூடி இருநதால் மந்திரியாவார. சூரியன் சுக்கிரன் கூடினல் நாட்டியம் மல்யுத்தம் செய்வான். பந்து ஜன பகை ஏற்படும். கண் பார்வை குனறும். 1, 8, 9, 10ல் இருந்தால் ராஜயோகமாகும். சூரியன் சனி கூடினல் தந்தை உறவு பாதிப்பு, பகை, போராட்டம் ஏறபடும். மனைவி மக்கள் அற்றவன். வியாபாரத்தில் கெட்டிக்காரன. சூரியன் ராகு சேர்ந்தால கப வாதஜ்வரம ஏற்படும். ஆடுமாடு நாசம், பலதத எதிர்ப்பு ஏறபடும். 7ல் இருந்தால் ஸ்திரியால் தன நாசம வரும.

சந்திரனும் செவ்வாயும் சேர்ந்தால் யுத்தத்தில் சூரன். ரத்த சம்மநதமான நோய் உண்டு. நல்ல மனேதிடம் இருக்கும். தாய்க்கு நன்மை செய்யான. மந்திர சித்தியில் வல்லவன், சூது ஏமாற்று வியாபாரம் உடையவன். சப்தமத்தில்

திரு. S பட்டாபிராமன்.
மன்னர்குடி

சேர்ந்தால் சந்திர மங்கள யோக மாகும். திருமகள் வீட்டில் வாசம் செய்வாள். சந்திரனும் புதனும் கூடினல் புலவன் புத்தி கூர்மை தன வான் களத்திரம் புத்திரம சுகமுண்டு புன்சிரிப்பு பூத்த அழகான முகம் இருக்கும். சந்திரனும குருவும் கூடி இருப்பது குரு சந்திரயோகமாகும். பொன் பொருள் பூமிபலிதம் உளள வன். ஸ்திரி மூலம் பணம், தெய்வ கடாக்ஷம், பிறந்த மனை வீட்டில் தெய்வம் நின்று காக்கும். பட்டம் பதவி புகழ் பிரதாபம் வரும் தேவ பிறப்பாகும். சநதுருககளை வெல் வான். ஸ்வீகார சொத்து கிடைக் கும். 11ல் இருந்தால எதிாபாராத தன பிராப்திவரும். சநதிரன் சுக் கிரன் சேர்ந்தால் விஷமன் தரித்திரன். கலகம் செய்வார், வியாபார திறமை உண்டு ஜவுளி வியாபாரம் செயவான். சந்திரனும் சனியும் சேர்ந்தால் சனி சசியோகமாகும். தத்துவ ஞானம் ஆராய்ச்சி உடையவர். முதிய ஸ்திரியை சேருவன். வேசியை தன மாக மதிப்பான. கடகத்தில் கூடி இருந்தால் வயிற்றில் வியாதி தரும். 4ல் கூடினல் நதியில் வீழ்ந்திறப் பான்.

செவ்வாயும் புதனும் சேரின் மங்கள யோகமாகும். டாக்டர் படிப்பு மருந்து வியாபாரம், செய் வான். பொன் பொருள் பூமி புஷ்பம் பழக்கடை வியாபாரம் ஏற்படும். ஸ்திரி சேர்க்கை, விதவை சங்கமம் தரும். செவ்வாய் குரு சேர்ந்தால் குரு மங்கள யோகமாகும். திருப்பணி செய்வார். ஜோதிடம் வேதம் பேச்சு திறமை, நல்ல குணம் உண்டு. வீடு பூமி கட்டிடம் உண்டு. புரவல நகரத்திற்கு புகழ் அதிகாரியாவான். பணமும் பதவியும் தரும். செவ்வாய் சுக்கிரன் சேர்ந்தால் சூது பொய் பிறர் மனைவி நேசம் இருக்கும். மல் யுத்தத்தில் வல்லவன். களத்திர காரகன சுக்கிரனுக்கு செவ்வாய் சம் மந்தம் நல்லதல்ல. மனைவி வாழ்க்கை யில் ஒரு அதிருப்தி, சுக குறைவு இருக்கும். 5, 7, 9ல் இருந்தால் மனைவி இல்லை. செவ்வாய் சனி சேரு வது கொடிய தோஷமாகும். வாழ் வில் தடை, தாமதம் எதிர்ப்பு போராட்டம விபத்து கண்டம் இவை களைச் சந்திக்க நேரும. சோதனையும் வேதனையும சூழந்திருக்கும். விஷம் மது கலகம் பொய் பொறுமை உடை யவா. இந்திர ஜாலம் அறிநதவன். ஏட்டிக்குப் போட்டி இருககும்.எதா நீசசல போட வேண்டும். செவ்வாய் ராகு சேர்ந்தால் சதா சண்டை சச் சரவு சிக்கல் தோன்றும், தீ திருட்டு சேதம ஏறபடும். செவ்வாய் கேது சேர்ந்தால ஞானமும் பக்தியும மேலிடும். தெய்வீகம் தத்துவ ஞானம் வரும். 9, 11ல் இருந்தால ராஜயோகம்.

புதனும் குருவும கூடினல் பாக்கிய வான். ஆலயம தொழுவான அறி வாளி பண்டிதன் நிருத்தியம் வாத் தியம் இசை ஞானம் வரும். சிற்ப சாஸ்திரி நாடகம சினிமா நாட்டியம் இசை இலக்கணததில் வல்லவன். கற்பனை சகதி கல்வி கணிதம் நன்கு வரும். நன்ருய் பேசுவார். புதன் சனி கூடினல் சத்துரு இல்லை. தன வான் கவியோன். அவனியில் குணி தங்கள் செயகுவன். ஆனல் கட ஞளி. கேநதிரத்தில் இருந்தால் சிற்ப வேலையில் நிபுணன். சொன் னது பலிக்கும. இசையில் நாட்டம் புதன் ராகு கூடினல் உறவினர் தொல்லை. நன்மை செயதாலும் தீமையாய் முடியும். கெட்ட பெயர் வரும. சண்டை வீடு தேடி வரும்.

குருவுடன் சுககிரன் சேர்வது குரு சுக்கிர யோகமாகும். தெள்ளிய வித்தையோடும் தீதிலா மனையாளோ டும் ஒள்ளிய குணங்களும் ஓங்கிடு செல்வமும் தனமும் கீர்த்தியும் பெறு வான் பக்தர்களின் தொண்டன். அழகிய ரதி போனற மனைவி உண்டு. வழக்கறிஞா அட்வக்கேட் அரசியல் வாதியாய இருப்பர். 9ல் இருந்தால் ராஜயோகம. குரு சுக்கிரன் நின்ற வீட்டதிபர் கேந்திரத்தில் இருந்தால் அரசாளும் யோகமாகும். மனைவி யால் அதிர்ஷ்டம் வரும். குரு சனி கூடி இருந்தால் மந்த குணம். வாழ்க்கையில் கஷ்டப்பட்டு முன் னேறுவான.புத்திரதோஷம் தலைவனு வான். குரு ராகு கேது சனி பாவி களுடன சேரும்போது குரு சண்டாள யோகம் ஏற்படுகிறது. துரதிஷ்டம். கைக்கு கிட்டியது வாய்ககு கிட்டாத நிலைமை, தரித்திரம், மறதி ஏற்படும். குரு சநதிரன சூரியன் கூடில் வாகன யோகம்.

சனி சுக்கிரன சேர்ந்தால் பார்வை யில் கோளாறு ஏற்படும். உணவு சமைப்பதில் வல்லவன். அவமான களததிரம் வரும். மரவேலை, ஓவியம் அச்சு வேலை, கல்தச்சுக் கலை வரும். ரேடியோ இன்ஜினியர் ஆகலாம். Broadcast தொழில் லாபம் தரும். சுக்கிரன ராகு சேர்ந்தால் சினிமா துறை, சங்கீதம் வரும். மனைவி உடம்பு பாதிக்கும். வண்டி வாகனத் தொலலை இருக்கும். ராகு சனி சேர்க்கை அதிர்ஷ்டம் வெற்றி தரும். ராகு சனி சேர்க்கையை குரு பார்த்தால் ராஜயோகம்.

லக்கினதிபதியுடன் மூன்று கோள் கூடின் எங்கிருந்தாலும் ராஜயோகம். ராகுவுடன் 4 கிரகங்கள் கூடி இருந் தால ராஜயோகம். ராகு புதன் சுக்கிரனுடன் கூடி இருந்தால் ராஜ யோகம். 12ல நான்கு கிரகங்கள் கூடி இருந்தாலும் பூமி பொருள் சிதைந்து போகும. 7மிடம் 8 மிடததில் கிரகஙகள கூடாமல் சுத்த மாய் இருப்பது நல்லதாகும். 7-ம் அதிபதி சுக்கிரன் ராகு மூவரும் ஏழில் கலந்திருந்தால் தந்தை தேடிய சொத்தை வேசியருக்கு கொடுத்து விட்டுத் தெருவில் திரிவான். கிரக சங்கமம் கிரக பலன்களை மாற்றி யோகப் பலன்களை ஏற்படுத்துகிறது.



# வேதாந்தமும் விஞ்ஞானமும்

திரு. கே. சுப்ரமணியன்,
நகலூர்.

இன்றைய உலகம், எதையும் ஆராய்ந்து பார்த்துவிட்டுச் சரியென்று பட்டவற்றை மட்டும் ஏற்றுக் கொள்ளும் விஞ்ஞான உலகம். ஆனால் எவ்வளவுதான் மனித அறிவு முன்னேறியிருந்தாலும் முழுமையும் அறிந்து விட்டோம் என்ற திருப்தி இல்லை. என்றாவது அடைவோம் என்ற நம்பிக்கை மட்டுமே நம்மை வழிநடத்திக் கொண்டிருக்கிறது.

புதிது புதிதாக உண்மைகள் தெரியத் தெரியத்தான் பழமையின் சிறப்பு இன்று புலப்பட ஆரம்பிக்கிறது. முன்பு ஞானிகள், அனுபவ விவேகத்தின் மூலமோ, தீர்க்க தரிசனத்தின் மூலமோ கண்டறிந்து கூறியவைகள் இன்று ஆராய்ச்சியின் மூலம் நிரூபிக்கப்பட்டு வருகின்றன. மனித அறிவுக்கு அப்பால் நின்று, பிரபஞ்சத்தின் ரகசியங்களை நம் ஞானிகள் தெளிவாகவே விளக்கியுள்ளனர்.

மேலை நாடுகள் உலகத்திற்கு விஞ்ஞான அறிவைப் பரப்பி வரும் போது, கீழை நாடுகள்—குறிப்பாக இந்தியா—ஆன்மீக ஞானத்தை அளித்து வருகின்றன. மனித அறிவு அதிகமாக அதிகமாக குழப்பம் ஏற்பட்டுள்ளது. அக்குழப்பம் ஆன்மீக ஞானததால் தீர வேண்டிய நிலை இன்று ஏற்பட்டுள்ளது.

இந்தியாவின் பழைய சாஸ்திரங்களிலிருந்து பெறப்படும ஞானம் அளவிடற்கரியது. வேதங்களின் மீதும் வேதாந்தத்தின் மீதும விஞ்ஞானிகளுக்குள்ள ஈடுபாடு மகத்தானது. ஏகோபித்து எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்படுவதே உண்மை எனப்படும். அது இனம், மதம், சமுதாயத்தினின்றும் தனிப்பட்டு நிற்பது. எனவே நம்முடைய ஆதிகால கண்டு பிடிப்புகள் இன்று நிரூபணம் பெற்று வளர்ந்து பரவி வருவது புரிந்து கொள்ளக் கூடியதுதான.

இநதிய ஞானம் பல கொள்கைகளாலும், பல மதஙகளாலும் கதம்பமாகக் காணப்படுகிறது. ஆனால் இவற்றின் கட்டுப்பாடுகளுக்கு மீறி நிற்கும் ஞானிகளின் பரம்பரை இன்றுவரை தொடர்ந்து கொண்டே இருக்கிறது. அவர்களின் விழிப்புநிலை சார்ந்த விவேகம் இன்று வழிகாட்டியாகிறது.

சிவனும்சக்தியும் ஒன்று என்ற பழங்கருத்தானது, பொருளும் சக்தியும் ஒன்று என்ற ஐன்ஸ்டீனுடைய புதிய கண்டுபிடிப்புக்கு ஒத்ததாகக் காணப்படுகிறதல்லவா? இரண்டாயிரம் வருடங்கள் பழமையான கிரேக்க நாகரிகம்கூட 'பொருளை'ப் பற்றிச் சில கருத்துக்களைக் கூறியுள்ளது. டெமாக்ரடீஸ் என்பவர் பொருளானது சிறு பகுதிகளால் ஆனது என்கிறார். அரிஸ்டாட்டில் பொருளின் அழியாத தொடர்ச்சித் தன்மையை நம்புகிறார். ஆனால் பாகவதத்தில் பொருள்பற்றிய விவரிப்பு பிரமிப்பூட்டும் விதத்தில் காணப்படுகிறது.

பாகவதத்தின் மூன்றாவது பகுதியான திரிதியஸ்கந்தத்தில் பதினொன்றாவது அத்தியாயத்தில் மைத்திரேயர் விதுரனைப் பார்த்து கீழ்கண்டவாறு கூறுகிறார்.

'குருகுலத்தோரில் சிறந்தவனே! பிறக்கிற வஸ்துவினுடைய காரணங்களுக்குள்ளே கடைசியாக இருக்கிற, அவயவத்துக்கு அவயவமாகாமலும், அனேகமாயிருந்தும் காரியாவஸ்தையை அடையாமலும், ஒன்றோடொன்று கூடாமலும் யாதொன்று இருக்கிறதோ அது பரமாணு (இம்மி) என்று அறியதக்கது. ஏகமாகச் சேருகின்ற பரமாணுக்களாலே மனிதர்களுக்கு அவயவி என்கிற புத்தியானது உண்டாகிறது. அந்தப் பரமாணு விய வஸ்தைகளுடைய பிராப்தியினால் பிரபஞ்சத்தை அளவிட்டு நின்றும், பகவானுடைய சக்தி ஸ்வரூபமாகியும், மிகவும் சூக்ஷ்மமாகியும், சிருஷ்டி ஸ்திதி லயங்களுக்குக் காரணமாகி நின்ற காலமும் ஸ்தூல சூக்ஷ்ம பேதங்களால் அறியப்பட்டு நிற்கிறது. பிரபஞ்சத்தினுடைய பரமாணு அவஸ்தையை அனுபவிக்கிற காலமானது பரமாணு என்று சொல்லப்படும் அந்த காலமானது பரம மகா காலம் ஆகும். இரண்டு பரமாணுக்கள் ஒரு அணு வென்று கூறப்படும். மூன்று அணுக்கள் ஒரு திரிசரேணு என்று சொல்லப்படும்'.

மேற்கூறிய கூற்று அணுவைப் பற்றிய சிறந்த விவரிப்பு எனலாம். டால்டன் 1803ல் அணுவைப் பற்றிச் கூறியதை விட இது தெளிவாக விளக்குகிறது. இன்றைய நுணுகிய ஆராய்ச்சியில் பரமாணுக்களைப்பற்றி விரிவான விளக்கங்கள் வெளிவந்து விட்டன. இரண்டு அணுக்களோ அதற்கு மேற்பட்டவைகளோ சேர்ந்ததுதான் மூலக்கூறு (திரிசரேணு) என்பது நமக்குத் தெரியும். ஆனால் அன்றைய நிலையில் மேற்சொல்லப் பட்ட விளக்கம் ஆச்சரியப்படத் தக்கதே.

மேலும் மைத்திரேயர் கூறுகிறார்; 'ஜன்னல் வழியாகப் பிரவேசிக்கின்ற சூரிய கிரணங்களிலே அனுவர்த்தித்தும், ஆகாசத்திலே பறந்து கொண்டும், பூமியை அடையாமலுமிருக்கிற

மூன்று திரிசரேணுக்களை அடைகிற காலமானது துருடிகாலம் எனப் படும். நூறு துருடி காலமானது ஒரு வேத காலம். மூன்று வேத காலங்கள் கூடியது ஒரு லவ காலம்; மூன்று லவம் கூடியது ஒரு நிமிஷம்; மூன்று நிமிஷம் ஒரு க்ஷணம்; ஐந்து க்ஷணம் ஒரு காஷ்டை; பதினைந்து காஷ்டை கள் ஒரு லகு: பதினைந்து லகுக்கள் ஒரு நாழிகை; இரண்டு நாழிகை ஒரு முகூர்த்தம்; ஆறு அல்லது ஏழு நாழி கை மனிதர்களுக்கு ஒரு ஜாமம். ஐந்து குன்றிமணி எடை பொன்னு னது ஒரு மாஷம் எனப்படும். நாலு விரற்கடை அளவாகப் பண்ணப்பட்ட நாலு மாஷப் பொன்னுலே அடியிலே பண்ணப்பட்ட துளை உடையதாகிய, ஆறு பலம் தாமிரததாலே செய்யப் பட்ட பாத்திரமானது, நாழி ஜலத் திலே, அநதத் துளை முழுகப் பாத் திரத்தை முழுக வைத்ததும், எவ்வள வில் நிறைந்து முழுகிப் போகிறதோ, அநதக் காலம் ஒரு நாழிகை என்று சொல்லப்படும்.'

மேற்கூறிப்பிட்டுள்ள கால அளவு கள் திகைப்பூட்டக்கூடியன. இன் றைய நவீன முறைப்படி பரமாணுக் காலத்தைக் கணக்கிட்டால், ஒரு 'மைக்ரோ செகண்ட்' (ஒரு நொடி யின் பத்து லட்சம் பிரிவுகளில் ஒன்று) என்பதே அதுவெனக காண லாம். இதிலிருந்து அணுவைக் கணக கிட்டால், 10.13 மீட்டர் ஆகிய உட்கருவின் (நியூக்ளியஸ்) அளவை அடையலாம்.

கிரேக்கர்கள் நீருக்கு பதில் மணலை உபயோகிததனர். காலப் பரிணமத் தில் மணலின் அளவைக் கணித்தறி வதில் தொல்லைகள நேரிடும் என்ப தால் நம்மவர் நீரைப் பயன்படுத் தினர்.

இவைகளெல்லாம கவிகளின கற் பனையாகாமல் உண்மையின் தளத்தில் நீரூபிக்கப்படக கூடியவை. அண்ட வெளி, காலம், பொருள பற்றிய அறிவும், கோடியும் கோடிக்குமேல் கூறப்படும் கணக்கியலும், இயந்திர விசித்திரங்களும், பிரமாண்டமான கட்டிடககலையும், ரசவாத ரசாயனங் களும், மூலிகை மருந்துகளும் இந்திய ஞானத்தின் சுரங்கங்களாகும்.

இந்தியர்களின் தெய்வீக, ஆன்மீக நம்பிக்கைகள் பற்றியும், மூட நம்பிக் கைகள் பற்றியும் பல்வேறு கருத்துக் கள் நிலவுகினறன. சராசரி மனித னின் மூட நம்பிக்கைகளை வைத்து, பண்பாட்டு அறிவை எடைபோடக் கூடாது. சாதாரண மனிதனுக்கும் அறிஞனுக்கும் இடையில் உள்ள தூரம் மேலை நாடடிலும் உள்ளது தான். சூனயககாரிகளை எரித்த மாபெரும மூடத்தனததைக் குறிப பிட்டு, மேலை நாட்டை முற்போக கானது எனறு கூறுவதற்கியலாது எனகிறா ஸ்டானிஸ்லாவ் ஆன் ரெஸ்கி. ராகு, கேது பற்றிய கதை களையும், சூரிய சந்திர கிரகணங்களைப் பறறிய நம்பிககையையும் வைத்து இந்திய ஞானத்தை அளக்கக்கூடாது. கிரகண காலங்களையும், ராசிகளின் சுழற்சிகளையும் கணித்துத் துல்லிய மாக அறியும் ஜோதிட சாஸ்திரம், உணமையான ஞானம் எந்நிலையில் இருந்தது என்பதைக் காட்டுகிறது.

மேலைநாட்டின் இன்றைய முன் னேறறமும, நம் தாழ்நிலையும் தெரிந் ததே. ஆனல் இதை வைத்து இந்தி யப் பழமையின சிறப்பை மறைக்க முடியாது. மேலைநாடு விஞ்ஞானத் தை வழங்க, கீழைநாடு ஆன்ம ஞானத் தை அளிக்கட்டும் என்று கூறிய ரோமன் ரோலண்ட், இரண்டின் இணைப்பையும் வலியுறுத்தி, அதில் தான் உலகத்தின் கதிமோட்சம் இருப் பதைத் தெளிவுபடுத்தியுள்ளார்.

பிரளய கால அழிவின் போதும், படைப்புக் காலத் துவக்கத்தின் போதும் தாண்டவ நடனம் நிகழ் வதை நம் புராணங்கள் கூறுகின்றன. அழிவிலும், படைப்பிலும் அணுவின் இம்மிகளில் நடன நிலை காணப்படு வதைக் கண்டுளளனர் இன்றைய விஞ்ஞானிகள். இவ்வொற்றுமையை காரி ஜுகோவ் விளக்கிக் காட்டிப் பாராட்டுகிறார்.

'ஏகம் சத்' என்பதன் பொருள் இன்று தெளிவாகிறது. இனம, மதம், சமூகங்களால கட்டுப்படாமல் நிற கும் இந்திய ஞானம் — ஆன்மா, வாழ்க்கை, நிதாசனம், சததியம் என்பவற்றின் ஒருமையை விளக்கி நிற்கிறது. வேதாந்தம் என்பது அறிவு. அநத அறிவு இன்னும் ஆரா ய்நது அறியப்படும் நிலையில் உள்ளது வருநதத்தககது மூடத்தனத்திலிருந் தும, குழப்பங்களிலிருந்தும், இழிவு களிலிருநதும் மீண்டு, உணமையையும், தெளிவையும, மேல்நிலையையும காண முயல வேண்டும்.



## அறிவிப்பு

திருமலையில் கல்யாணோற்சவம் போன்ற ஆர்ஜித சேவைகளுக் காக பக்தர்களால் எம்.ஓ. மூலம் அனுப்பப்படும் தொகையை தி. தி. தேவஸ்தானம் ஏற்றுக் கொண்டாலும், அம்முறை சில நிருவாக சிககல் களையும், கால தாமதத்தையும் ஏற்படுததுவதால், பக்தர்கள், அனுப்ப வேண்டிய தொகையை டி. டி. (D. D) மூலம் அனுப்பினுல மேலாண மைக்கு அம்முறை உதவியாக அமையும். மேலும ஆநதிரா வங்கி மற்றும் சில வங்கிகள் இது போன்று தி. தி. தேவஸ்தானத்தின் பெய ரில வழங்கப்படும் டி.டி.களுக்கு எவ்விதக் கட்டணமும் பெற்றுக் கொள்வதில்லை.

# ★ கீதை காட்டும் நல்வழி ★

திரு. டி. கே. நாராயணன், M.S.c., M.Phil.
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.

## புருஷோத்தம யோகம்

### அத்தியாயம்—15.

### பகுதி—11.

நமது உடலைப் பற்றிக் கொஞ்சம் கண்களை மூடிச் சிந்தித்துப் பார் போமானால் இறைவனது மகிமை நமக்கு தெற்றெனப் புலனாகும். நமது உடலுக்குள் எத்தனையோ ஜீவ ராசிகள் உள்ளன. ஒவ்வொரு பகுதியிலும் லட்சக்கணக்கான - ஏன் - கோடிக்கணக்கான செலகள உள்ளன. ஒவ்வொரு செல்லும ஒவ்வொரு உயிராகும். அனைத்துக்கும் 'ஹிருதயம்' உணடு. அத்தனை ஹருதயத்திலும் இறைவன் உறைகிறார்.

இந்த உண்மையை உணர்ந்து கொண்டால் இறைவன் அல்லது பரமாத்மா இருப்பது மூலதாரத்திலா அல்லது சஹஸ்ராரத்திலா, அல்லது நெஞ்சுப் பகுதியில் உளள இதயத்திலா என்ற கேள்விக்கு அர்த்தமில்லாது போய்விடுகிறது.

கேசத்திலே பேன் உண்டாகின்றன. வியர்வையிலிருநது பூச்சிகள் உண்டாகின்றன. வயிற்றினுள் பலவகை நாடாப் புழுக்கள உற்பத்தியாகின்றன. பழம், பால், சாதம், ரொட்டி போன்ற எந்த வஸ்துவையும் சில நாட்களுக்கு அப்படியே வைத்திருநதால் அவற்றில் புழுககள தோன்றுகின்றன. இவையெல்லாம எங்கிருந்து தோனறுகின்றன? ஒரு உயிர் மற்றொரு உயிராகப் பரிணமிக்கும் ரகசியம் இது. கல்லிலும், புல்லிலும், மண்ணிலும், மரத்திலும், மனிதனிலும், மிருகத்திலும் எலலாப் பொருள்களிலும் இறைத் தத்துவம் மிளிர்கிறது. கண்ணுடையார் காண்பர். காதுடையவர் கேட்பர். அறிவுடையவர் அதை அறிவர்.

'ஹ்ருதயம்' என்ற வார்த்தையின் தாது 'ஹ்ரு' ஆகும். இந்த தாது விலிருந்துதான் ஹரி, ஹர என்ற வார்த்தைகளும் உண்டாகின்றன. கண், காது, மூக்கு போன்ற இந்திரியங்கள் மூலம பெறப்படும் ஞானம் எங்கே ஒன்றுபடுகிறதோ, எங்கிருந்து இந்த அறிவு மீண்டும் நினைவு கூறப் படுகிறதோ அதுவே இருதயமாகும். ஸமஸகாரங்களின் உறபத்தி, காப்பு மற்றும் மறையும் இடம் ஹிருதயமாகும். உயிாகளின் காப்புக் கடவுள் ஹரி, அழித்தருளும் கடவுள் ஹரன் என்பதன தத்துவம் இதுவேயாகும்.

பகவான் ஹிருதயத்தில் எந்த வடிவத்தில் இருககிறார் என்னும் அடுத்த கேள்வி எழுகிறது. 'அஹம்' எனனும் வடிவில் இருக்கிறேன் என்கிறார் பகவான்.

'அப்படியானால் நீர் ஏன் எங்களுக்குத் தெரிவதில்லை?' — பக்தன் கேட்கிறான்

'ஸநநிவிஷ்ட:' — இது பகவானது பதில். 'அதாவது உங்களுக்கு மிக மிக அருகில், உங்கள் மயமாகவே, உங்கள் சொருபமாகவே நான் இருக்கிறேன்' என்கிறார். நமக்கு அன்னியமாக உள்ளவற்றை நாம் நமது ஊனக கணகளால் பார்த்து அறிகிறோம. நமக்கு உள்ளே உள்ளதை, நம மயமாக உள்ளதைக் காண இநத ஊனக கண பயன்படாது. அதற்கு ஞானக் கண் வேண்டும். அதுவே 'அறியும் அறிவு' ஆகும். இறைவன் இருதயத்தில் இருந்து கொண்டு என்ன செய்கிறார்?

'மத்த; ஸ்மிருதிர் ஞான மபோஹனஞ்ச' — நினைவு, அறிவு, மறதி அனைத்தும அவரிடமிருந்தே உண்டாகின்றன. முந்தைய சம்ஸ்காரங்களை, செயல்களை மீண்டும் எண்ணிப் பார்த்தல் 'ஸ்மிருதி' அல்லது நினைவு ஆகும். புலன்கள் மற்றும் மனத்தின் மூலம் விஷயங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளுதல் 'ஞானம்' ஆகும். இந்த இரணடும் இல்லாத நிலை 'அபோஹனம்' ஆகும்.

பாகவதத்தில், त्वत्तो ज्ञानं हि जीवानां प्रमोषस्तेऽत्र शक्तित: என்ற ஒரு வாக்கியம் காணப்படுகிறது. 'பிரபோ! உம் மூலமாகவே ஜீவர்களிடம் ஞானம் உண்டாகிறது உமது சக்தியினாலேயே அது மறையவும் செய்கிறது' என்பது இதன் பொருள். கீதைக்கு விளக்கமாக இப்பகுதி அமைகிறது.

சிம்மாசனத்தில் அரசன் அமர்ந்திருக்க அரண்மனையில் உள்ள எல்லோரும் எல்லா வேலைகளையும் ஒழுங்காகச செய்வது போல், பரமாத்மாவின் சான்னித்திய மகிமையால் பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தும் முறை பிசகாது செயல்படுகின்றன. தன் னளவில் அரசன் செயலற்றவனாகத் தென்பட்டாலும், அவன் முன்னிலையில் அனைத்தும் ஒழுங்காய் நிகழ்வது போல பரமாத்மா அதி சூக்ஷ்மமான நிலையில் இருந்து கொண்டு அனைத்தின் இயக்கத்துக்கும் அடிப்படைக் காரணமாக அமைகிறது.

நமது ஹிருதயத்தில் பகவான் நம் மயமாக இருந்தும் நம்மால் அவரைப் புரிந்து கொள்ள முடியவில்லையே? இது எதனால்? துர்யோதனனுக்கு முன்னர் பகவான கிருஷ்ணர் தூதனாக நின்றார். துர்யோதனன் அவரை இன்னார் என்று அடையாளம் கண்டு கொள்ளவில்லையே? ஏன்? கம்ஸனுக்கு முன்னால் கண்ணன் குழந்தை வடிவில் நின்றார், அவன் புரிந்து கொள்ளவில்லையே. ஏன்? ராவணனுக்கு முன்னால் ஸ்ரீ ராமனாகப் பகவான் நின்றார். அவனும் அவரைப் புரிந்து கொள்ளவில்லையே? ஏன்?

அறிவை அறியாமை மறைக்கிறது: சூரியனை மேகம் மறைப்பது போல, நீர்ப் பரப்பை பாசம் மறைப்பது போல.

பரமாத்மனைப் பற்றிய அறிவை நமக்கு உணர்த்துவது யார? ஆசாரியர் அல்லது குரு. உலக அறிவை குழந்தைக்கு ஆசிரியர் அளிப்பது போல, இறை அறிவை நமக்கு ஆச்சாரியர் அளிக்கிறார்.

யார் ஆச்சாரியர்? பிரம்ம ஞானம் கைவரப் பெற்றவர், வேத வித்தையில் ஊறியவர். அதன்படி நடப்பவர்.

'ஆச்சார்யர்' என்ற வார்த்தையின் விளக்கம் கீழவருமாறு:

आचिनोति च शास्त्रार्थमाचारे स्थापयत्यपि ।
चर्या (சர்யா) என்பதிலிருந்து आचार्य என்ற வார்த்தை வந்துள்ளது. 'எவர் வேதம் முதலான சாஸ்திரங்களில் கூறியபடி தானும் நடந்து பிறரையும் நடக்கச் செய்கிறாரோ அவரே ஆச்சாரியர்' என்பதுவே ஆச்சாரியர் என்ற பதத்தின் பொருள் ஆகும்.

இப்பொழுது 'வேதங்களில் என்ன இருக்கிறது?' என்ற கேள்வி எழுகிறது.

இதற்கு இந்த சுலோகத்தின பிற்பகுதியில் பகவான் விடை தருகிறார்.

'வேதைஶ்ச ஸர்வம் அஹமேவ வேத்யோ'—வேதங்கள் அனைத்திலும் அறியப்பட வேண்டியவன் நானே' இதிலே एव எனற ஒரு சொல வருகிறது. இந்தச் சொல்லின் அடிப்படையில் இந்த வாக்கியத்தை நான்கு விதமாகப் பிரித்து விளக்கம் சொல்லலாம்.

१. सर्वैरेव वेदैरहमेव वेद्यः
(ஸர்வைரேவ வேதை ரஹமேவ வேத்ய:)

२. अहं वेदैरेव वेद्यः
(அஹம் வேதைரேவவேத்ய:)

३. अहमेव वेद्यः (அஹமேவ வேத்ய:)

४. अहं वेद्य एव
(அஹம் வேத்ய ஏவ)

இவற்றின் பொருள் முறையே கீழ்வருமாறு:

1. அனைத்து வேதங்களின் மூலம் அறியப்படுபவன் நானே.

2. நான் வேதங்களால் மட்டுமே, அதாவது வேதங்களால் மூலமே அறியப்படத் தக்கவன்.

3. அறியபபட வேண்டியவன் நானே. (ஏனையவை அல்ல)

4. (இப்பிறவியிலேயே) என்னை அறிந்து கொளளுக.

ஹிநது மதத்தின் அடித்தளமாக வேதங்கள் அமைகின்றன வேத சாரம் உபநிடதங்கள். உபநிடத சாரம் பகவத்கீதை. பகவத்கீதையின் சாரம் பரமாதமா. எனவே பரமாத்மனை அறிவதும் வேதஙகளை அறிவதும் ஒன்றே.

सर्वे वेदा यत्पदमामनन्ति
तपांसि सर्वाणि च यद् वदन्ति।

'எல்லா வேதங்களும் எவனைச் சுட்டிக் காட்டுகினறனவோ, எல்லா சாதனைகளும் எவனை இறுதி இலட்சியமாகக் கொண்டுள்ளனவோ அவனே பரமாத்மா' என்று உபநிடதம் கூறுகிறது.

वेदे रामायणे चैव पुराणे भारते तथा ।
आदावन्ते च मध्ये च हरिः सर्वत्र गीयते ॥

'வேதம், ராமாயணம், புராணம், மகாபாரதம் ஆகிய அனைத்திலும் தொடக்கம் இடை மற்றும் முடிவில பாடப்படுவது அந்தப் பரம்பொருளாகிய ஹரியே'.

'வேதாந்தக்ருத்'—வேதாந்தத்தைச் செய்தவன். வேதங்கள் மற்றும் புராணஙகளைத் தொகுத்து நமக்குத் தந்தவர் பகவான் வேத வியாஸர். கீதையில் பத்தாவது அத்யாயத்தில் கண்ணன் 'முனீனாமபயஹம வியாஸ:'—முனிவர்களில் நான் வியாஸர் என்று குறிப்பிடுகிறார், ஆக வியாஸர் கண்ணனேயன்றி வேறு எவரும் அல்ல. இதைக் கருத்தில் கொண்டு 'வேதஙகளைச் செய்தவனும் நானே' என்று பகவான் இங்கே குறிப்பிடுகிறார்.

குருவின் வடிவில் பகவான் வேதத்தை சீடனுக்குப் புரிய வைக்கிறார். அந்த குரு பகவானின் சொரூபமே.

'வேத விதேவ சாஹம்'-வேதத்தைக் புரிநது கொள்பவனும நானே.

குரு யாருக்கு வேதத்தைக் கற்பிக்கிறார்? சீடனுக்கு. குரு சொல்லும் வேத தத்துவத்தைப் புரிந்து கொள்வது சீடன். அந்த சீடனும்தானே என்கிறார் பகவான்.

பகவான் முதலில் அர்ஜுனனுக்குச் சாரதியாக அதாவது தேரோட்டியாகத்தான் செயல்பட்டார். பின்னர் 'ஶிஷ்யஸ்தே அஹம் சாதி மாம் த்வாம் ப்ரபன்னம்' என்று அர்ஜுனன் சொன்னதும் அவனது குருவாக ஆகி அவனை ஆட் கொண்டார். பக்தனின் மனநிலை மாறிப் பக்குவமடைந்ததும் பகவானின் அருள் அவன் மீது சுரக்கிறது.

அறிந்து ஐந்தும் உள்ளடக்கி ஆய்மலர்
கொண்டு ஆர்வம்
செறிந்த மனத்தராய்ச் செவ்வே-
அறிந்து அவன தன்
பேர் ஓதி ஏத்தும் பெருந் தவத்தோர்
காண்பரே
காரோத வண்ணன் கழல்.

(தொடரும்)



'ப்ரபத்தி' என்றால் 'சரணாகதி' என்று பொருள். 'சரணாகதி' யை இருவகையாகப் பிரிக்கலாம். ஒன்று மோக்ஷத்திற்காக செய்யும் 'சரணாகதி'. மற்றொன்று இதர பலன்களை உத்தேசித்துச செய்யும 'சரணாகதி'. முதலில் மோக்ஷத்திற்காகச் செய்யப் படும 'சரணாகதி' யை ஆராய்வோம்.

மோக்ஷத்திற்காகச் செய்யும் 'சரணாகதி' யை யார் வேண்டுமானாலும் நேரம் பார்க்காமல் ஜாதி, மத பேதமில்லாமல் செய்யலாம்.

ஸ்ரீ கிருஷ்ணன் 'கீதை'யில் உபதேசித்ததைப்போல் கர்மயோகம், ஞான யோகம், பக்தி யோகம் முதலியவை தற்கால நடைமுறைக்கும்,பலராலும் ஒருக்காலும் அனுஷ்டிக்க முடியாமல் இருக்கின்றன. இந்நிலையில் சாலச் சிறந்தது 'ப்ரபத்தி' யோகம் ஒன்றே தான். இதற்கு அடிப்படையான அங்கம் திடமான நம்பிக்கை. உதாரணமாக புராணங்களில் சொல்லப் படும் சிறியவர்களான துருவனுக்கும், ப்ரஹலாதனுக்கும் எப்படிப்பட்ட

# ப்ரபத்தியின் மஹத்துவம்

மோக்ஷமென்பது பிறவியெனும பந்தத்திலிருந்து விடுபடுதல் எனறு பொருள்படும். பிறவிக்கடலிலிருந்து விடுபட விரும்புமவன் ஒரு நிரந்தர மான சுகத்தையல்லவோ பெற விரும்புகிறான். இம்மாதிரியான சுகமோ அல்லது இன்பமோ ஒரே ஒரு லோகத்தில்தான் கிடைக்கிறது என்பது சித்தாந்தம். அந்த உலகில் துன்பம் என்பதே கிடையாது. அந்த உலகிற்கும் அதில் உள்ளவர்களுக்கும் அழிவே இல்லை. அந்த லோகத்திற்கு அதிபதியான ஸர்வேச்வரன் 'ஸ்ரீய: பதியான நாராயணன் என்று வேதஙகள் அறுதியிட்டுக் கூறுகின்றன. அந்த லோகம்தான் 'ஸ்ரீ வைகுண்டம்' என்றும், பரமபதம் எனறும் போற்றப் படுகிறது.

நாம் இல்வாழ்க்கையில் சுகத்தை விரும்பியலலவோ பிரயாசைப்பட்டு பணம் சம்பாதிக்கின்றோம். அது போல் மரணத்திற்குப் பின், நம்முடைய ஆத்மா வேறு பிறவியை எடுக்காமல் சுகமாகக் காலம் கழிக்க வேண்டுமானால் பரமபதத்தைத் தவிர வேறு இடம் ஏது? இதையல்லவோ ஒவ்வொருவரும் விரும்பவேண்டும்.

இனி வைகுந்தப் பதவியை அடையும் வழி முறைகளை ஆராய்வோம்.

திட நம்பிக்கை பகவானிடததில் ஏற்பட்டதோ, அந்த திட நம்பிக்கை அவசியம் வேண்டும். அப் யாசத்தினால் சுலபமாக இந்த நம் பிக்கையைப் பெற்று விடலாம்.

மேலும் பகவான் ஸ்ரீமந் நாராயணன் மேல் திட நம்பிக்கை வைக்க வேண்டுமென்றால் அவன் நமக்கெல்லாம் நாதனாகவும் (ஸ்வாமியாகவும்) கருணையுள்ளவனாகவும் நம்முடைய பாபத்தைப் போக்கி, நமக்கு மோக்ஷத்தை அளிக்க வல்லவனாகவும் தானே இருக்க வேண்டும் ஆக இந்த விஷயங்களிலும் நமபிக்கைக் கொண்டு அவன் ஒருவனே ரக்ஷிக்க வலலவன் என்ற எண்ணமும் அவசியம வேண்டும்.

அடுத்த படியாக நாம் ஒருவரிடம் உதவியை நாடினால், அப்பொருள் நம்மிடம் இல்லையென்றோ அலலது அப்பொருளை நாம் அடைய ஏதோ ஒரு தடை இருக்கிறதென்றோ அல்லது உதவக் கூடியவனைக் காட்டிலும் நாம் கீழ் நிலையில் இருக்கிறோம் என்றுதானே பொருள். அதுபோல் நம்முடைய தீவினையால்தான் நமக்கு இதுநாள் வரை மோக்ஷம் கிடைக்கவில்லை. நல்வினையே அறியாது தீவினையின் பயனையும் சுமக்க முடியாத நிலையில் 'ஸ்ரீமந்நாராயணனே! உன்னைத் தவிர எனக்கு வேறு கதியே இல்லை. நீதான் ரக்ஷிக்கவேண்டும்' என்று மனம் நொந்து நம்முடைய இழி நிலையை தெளிவு பட உரைக்க வேண்டும். இவ்வாறு மனப்பக்குவமுடன் திட நம்பிக்கையையும் கைக் கொண்டு கீழே கொடுக்கப்பட்டுள்ள இரண்டு உறுதிமொழிகளையும் அளித்தல் வேண்டும்.

1. சாஸ்திரங்களில் சொல்லப்பட்டுள்ள முறைகளைக் கடைப்பிடிக்கிறேன். அஃதாவது பகவானுக்குப் பிரீதியானதைச் செய்வேன் — என்றும்,

2. சாஸ்திரங்களில் செய்யாதே என்று சொல்லப்பட்டதை எல்லாம் செய்யாமல் விடுதல். அஃதாவது, பாப காரியங்களையும், பகவான் உகக்காததையும் விலக்குவேன்—என்றும், 'சரணாகதி' செய்வதறகு மேலே சொல்லப்பட்ட திட நம்பிக்கையும், உறுதி மொழிகளையும் எடுத்துக் கொள்ளுதல் மிகவும் அவசியம். அடுத்தபடியாக 'சரணாகதி' எப்படிச் செய்ய வேண்டும்? என்று ஆராய் வோம்.

---

திரு. கி. பார்த்தசாரதி,
ஸ்ரீரங்கம்.

---

'சரணாகதி'யைஅனுஷ்டிக்க ஆசார்யன மிகவும் அவசியம. முறைப்படி ஆசார்யன் மூலம விவரங்களைத் தெரிநதுகொண்டு செயயப்பட்ட 'சரணாகதி' யே பகவானுககு உகப்பாகும். இம்மாதிரி 'சரணாகதி' மூன்று பாகங்களைக் கொண்டது. அவையாவன:

1. தன ஆத்மாவைச்சமர்ப்பித்தல்

2. தன்னைக் காக்கும் பொறுப்பைச் சமர்ப்பித்தல்.

8: தன்னைக் காப்பதால் வரும் பலனை சமர்ப்பித்தல் என்பன.

இதில் இரண்டாவதாகக் கூறப்பட்டுள்ளது மிக முக்கியமானதாகும். இதையே ஸ்வாமி தேசிகனும்,

" அஹம் மத்ரக்ஷண பரோ மத்ரக்ஷண பலம் ததா,
ந மம ஸ்ரீபதேரேவேதி ஆத்மாநம் நிக்ஷிபேத் புத!

என்று ந்யாஸ தசகத்தில் ஸாதித்துள்ளார். 'சரணாகதி' செய்து கொண்டவன், தன வாழ்வைப் பற்றியோ, அதை நடத்தும் விதம் பற்றியோ, தீவிர சிந்தனையும், கவலையும் பட்டால் அது விலைக்கு விற்றுவிட்ட பசுவைப்பற்றி ஒருவன் கவலைப்பட்டதற்கு ஒப்பாகும். ஏனெனில் வாழ்க்கை நடைபெறுவது பகவானின் பொறுப்பாகையாலும் நம் ஆத்மாவும், இகலோக வாழ்வும் அவனுடைய சொத்தாகையாலும், கவலைப் படவேண்டியவன் சொத்துக்கு உடையவனே அன்றி, சொத்தே தன்னைப் பற்றி எப்படி கவலைப் படாதோ, அதுபோல் நாமும், நம்மைப் பற்றிக் கவலைப்படாது, 'அவன் செயல்' என்று இருக்கவேண்டும் என்பது சித்தாந்தம்.

'சரணாகதி' செய்து கொள்ள நினைக்கும் ஒவ்வொருவனும், 'அதைத் தானே செய்கிறோம். மோக்ஷத்தை அடைய வேண்டும். அங்கு அழிவில்லாத ப்ரம்மானந்தத்தில் ஈடுபட வேண்டும்' என்று அகந்தையுடன் செய்யாமல், ஸ்ரீமந்நாராயணன் தனனுடைய அபரிமித கருணையால் நம்மை உய்விக்க எண்ணி நம் உள்ளத்தில் புகுந்து, 'சரணாகதி' செய்யத் தூண்டி செய்வித்துக் கொள்கிறான். அதனால் ஏற்படும் பலனும் அவனையே சாரும் என்று எண்ணிக் கொள்ள வேண்டும். இதையே 'ஸாத்விக த்யாகம்' என்பர் வைணவ மரபைச் சேர்ந்தோர்.

செய்த பாபத்திற்கு பச்சாதாபம் என்று ஒரு மருந்து உண்டு. இதைத்தான் ஆங்கிலத்தில் Repentance என்பார்கள். பகவானிடம் 'சரணாகதி' செய்ய நினைப்பவன் தன்னிடம் தீய வினைகள்தாம் மலிந்து கிடப்பதாகவும், நல் வினையே அறியாதவன் தான் என்றும், பாவங்களைப் போக்கி மோக்ஷம் தந்தருள வேண்டும் என வும் ப்ரார்த்தித்தால், கருணைக்கடலாகிய எம்பெருமான் ஏன் செவி சாய்க்காமல இருப்பான்? பச்சாதாபம் அல்லது Repentance என்பது நம் 'ஹிந்து' மதம் போல் பல மதங்களிலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட கொள்கை.

ஆக இப்படி திட விசுவாசத்துடனும் மனம் நொந்தும், முறைப்படி ஆசாரியன் மூலமாக செய்யப்பட்ட 'சரணாகதி' க்கு உள்ளம் உவந்து எம்பெருமான் பெரும் 'பேறு' தந்தருள்கிறான் என்பது உறுதி. 'சரணாகதி' செய்து கொண்டவனை உலகில் 'ப்ரபன்னன்' என்று அழைப்பர். இனி ப்ரபன்னன் செய்யவேண்டுவதைப்பற்றிக் கவனிப்போம்.

ப்ரபன்னன் 'சரணாகதி' க்குப்பின் மேற்சொல்லப்பட்ட உறுதி மொழிகளைக் காப்பாற்றுவதற்கு முயற்சி செய்ய வேண்டும். அப்படிச் செய்யாவிடில் பாபம் சம்பவிக்கும். பாலத்தின் பலனை அனுபவித்தே ஆகவேண்டும். ஆனால் பிறவி யென்பது இனி கிடையாதாகையால், தொடர்ந்து வர வாய்ப்பில்லாத, பாபத்தின் பலனையும் புண்ணியங்களின் பலனையும் எஞ்சியுள்ள வாழ்நாட்களிலே அனுபவித்துத் தீரவேண்டும். ஆகையால் மனதறிந்து செய்யும் பாவங்களைக் கூடிய வரையில் குறைத்துக் கொள்ளுதல் அவசியம். ப்ரபன்னன் முக்கியமாக 'பாகவதாபசாரம்' நேராமல் பார்த்துக் கொளளவேண்டும். அடியார்களுக்கு மனம, வாக்கு, காயங்களால் எந்தவித தீங்கும் இழைக்கலாகாது. ஏனெனில் இந்த வித பாவங்களைப் போக்க ஸ்ரீய: பதியாலும் முடியாது. அதற்குப் பிராயச்சித்தம், தீங்கிழைக்கப்பட்ட அடியாரிடமே சென்று வணங்கி மன்னிப்புக் கோருதல் அல்லது ஜீவிய தசையிலேயே பாவத்தின் பலனை அனுபவித்தல் ஆகும். ஆக இத்தகைய பாவங்களால் 'ப்ரபத்தி' பலனளிக்காமல் போகாது.

ப்ரபத்தி பலனளிக்காமல் போகும் நேரங்கள் (இரண்டு). கீழ்க்கண்டவைகள் மீறப்படும்போது.

1. மோக்ஷத்திற்காக மறுமுறை 'ப்ரபத்தி' செய்துகொள்ளக்கூடாது. இது திட நம்பிக்கையின் இழப்பைக் குறிக்கும.

2. கற்புக்கரசிக்கு எந்தெந்த இலக்கணங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றதோ அதுபோன்று, ஸ்ரீய: பதி விஷயத்தில் ஒரு ப்ரபன்னன் நடந்து கொள்ள வேண்டும்.

ப்ரபன்னன் மோக்ஷத்திற்கு எவ்வாறு செல்கிறான் என்று கவனிப்போம்.

## விண்ணப்பம்

ஸப்தகிரிக்குக் கதை கட்டுரைகளை அனுப்பும் ஆசிரியர்கள அவற்றின்பின் தங்கள் முழு முகவரியினை ஆங்கிலத்தில் எழுதவும். பிரசுரிக்கப்படும் துணுக்குகளுக்குச் சன்மானத் தொகை வழங்கப்படமாட்டா. சம்பந்தப்பட்டவர்களுக்கு ஓர் இதழ் மட்டுமே அனுப்பப்படும்; இந்து சமய விழாக்கள் பற்றிய கதை கட்டுரைகளை இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்பாகவே அனுப்பினால், தகுந்த தேர்வுக்குப் பின்னர் அவை அவ்வவ் மாதங்களில் பிரசுரிக்க உதவியாக அமையும்.

மரணத் தருவாயில் பிரபன்ன னுக்கு பகவான் தன் நினைவையும் கொடுத்து, அந்த ஆத்மாவை அழைத்து வர திவ்விய விமானத்தை யும், தன் சேவகர்களையும் அனுப்பு கிறன். திவ்ய விமானத்தில், பிர பன்னன், யமதர்மராஜன் தானே விரும்பிப் பெற்றுக் கொண்ட சலு கைப்படி அவரையே படியாக (Steps, வைத்து, திவ்விய விமானத்தில் ஏறு வதாக ஆன்றோர் வாக்கு. பிறகு சந்த்ர மண்டலம், ஸுர்ய மண்டலம், ஸத்ய லோகம் போன்ற உலகங்க ளின் மூலமாக, அந்தந்த உலக அதி பதிகளின் உபசரணைகளையும் வந்த னங்களையும் பெற்றுக்கொண்டு, விரஜாநதியில் ஸ்நானம் செய்து திவ் வியமான சரீரததைப் பெற்று, வைகுந்தம் ஏகி பகவானை அனுபவிக் கிறன் என்றும், அழிவில்லாத உல கில் பிரம்மானந்தத்தில் மூழ்கியிருக் கிறன் என்றும், மிகவும் ஏற்றமாக ப்ரபன்னன் கொண்டாடப்படுகிறன் என்றும் கூறுகிறது வேதவாக்கியம்.

'சரணுகதி' தத்துவத்தை ஒருவன் சரியாகப் புரிந்து கொண்டானுனல் மோக்ஷார்த்தம் செய்யக்கூடிய 'சர ணுகதி'யை நாடுவான். அப்படி மோக்ஷார்த்தம் 'சரணுகதி' செய்த வன் 'எல்லாம் அவன் செயல்' என்று எந்த கஷ்ட தசையிலும் வாளா இருப்பானே ஒழிய, இதர காம்ய பலனை உத்தேசித்து, கட்டுரை ஆரம் பத்தில் கூறியபடி, இதர நோக்க முள்ள 'சரணுகதி' யை அனுஷ்டிக் கவே மாட்டான். அதைப்பற்றி நமக்கு விமர்சிக்க அவசியமில்லை.

ஆக இப்படி உன்னதமான ஸ்தா னத்தைப் பெறுவதற்கு (ப்ரயாசை அதிகமில்லாமல்) ஒவ்வொருவரும் விருபபபட்டு காலம் தாழ்த்தாமல் 'சரணுகதி' செய்துகொண்டு மோக்ஷத்தை அடைய, 'ஸ்ரீய. பதி' யான 'நம் பெருமாள்' அருள் புரிய வேணுமென்று கட்டுரையைத் தலைக் கட்டுகிறேன். ★

# பஞ்சம் நீங்கியது

வீமினி, எஸ். ஜெகநாதன்.

முன்னெரு சமயம் பகவான் புத்தர் ஜேதவனத்தில் தங்கியிருந் தார். அப்பொழுது சிராவஸ்தி என்ற நகரில் பஞ்சம் தலை விரித்தாடி யது. அன்ன ஆகாரமின்றி மக்கள் தவித்தனர். ஆனுல் இதைப் பார்த்த அந்த ஊர் பணக்காரர்கள் ஏழைகளுக்கு உதவ முன் வர வில்லை. அவர்களுக்கு உதவ முற்பட்டால் தங்கள் கதி என்ன ஆகுமோ என்று அவர்கள் நடுங்கினர்.

ஒரு நாள் புத்தர் தம் முன்னுல் கூடியிருந்த பல பணக்காரர் களைப் பார்த்து, 'பஞ்சத்தினுல் மககள இப்படி அவதிப்படுகிறர்களே அவர்களுக்கு உதவ உங்களில் யாரும் இல்லையா' என்று கேட்டார்.

ஒருவரும் பதில் சொல்லவில்லை......... எல்லோரும் பேசாமல் இருந்தார்கள். புத்தர் மீண்டும் அவர்களைப் பார்த்துக் கேட்டார். 'உண்மையிலேயே பிறருக்கு உதவக்கூடிய மனம் படைத்த பரோபகாரி ஒருவர் கூட இந்தக் கூட்டத்தில் இல்லையா?'

அப்பொழுது அந்தக் கூட்டத்திலிருந்து ஒரு சிறுமியின் குரல் கேட்டது. 'ஏன் இல்லை? இதோ நான் இருக்கிறேன்' என்று சொல்லிக் கொண்டு கூட்டத்திலிருந்து ஒரு சிறுமி எழுந்து நின்றுள்.

அந்த சிறுமி வேறு யாருமில்லை. அந்த ஊரில் அநாத பிண்டிதர் என்ற கோடீஸ்வரனின் மகள். தகப்பானுரால் மிகவும் செல்லமாக வளர்க்கப்பட்டவள். பசி பட்டினி என்றுல் அறியாதவள். அவள் பெயர் சுப்ரியா. அந்தச் சிறுமியைப் பார்த்து புத்தர், 'குழந்தாய் சிறுமி யாகிய உன்னுல் இந்தப் பஞ்சக் கொடுமையை நீக்க என்ன செய்ய முடியும்' என்று கேட்டார்.

''நான் வீடுவீடாக சென்று பிச்சையெடுப்பேன். அந்த அன் னத்தை பட்டினி கிடப்பவர்களுக்குக கொடுப்பேன்'' என்றுள் அச் சிறுமி, புத்தர் அவளுககு ஆசி கூறினுர்.

சுப்ரியா அபபடியே செய்ய ஆரமபித்தாள். கோடீஸ்வரரின் மகள் பிச்சை எடுக்கிறுள் என்றுல், பணக்காரர்கள பேசாமல் இருப் பார்களா? அவள பிச்சை பாத்திரம் நிரம்பிக் கொண்டே இருந்தது. அவள் அந்த அன்னத்தை ஏழைகளுக்குக் கொடுத்துக் கொணடே யிருநதாள். விரைவிலேயே அந்த நகரின் பஞ்சம் நீங்கியது. சுப்ரியா வின புகழ் இன்றும் மங்காமல் உலகில் பிரகாசித்துக் கொண்டிருக் கிறது.

ஃ ஃ ஃ ஃ ஃ

# ○ ○ ○ திருவாழிகேசன் ○ ○ ○

நூவிரித்து நற்றமிழில் பாவிரித்த காவிரித்தாய் பூவிரித்து பின்னும் தம் புகழ் விரிக்கும் நெற்களஞ்சிய மாம் தஞ்சை மாவட்டத்தில் பாஸ்கர க்ஷேத்திரம் என்று சிறப்பாக அழைக் கப்படுகின்ற திருக்குடந்தை என்ற திவ்விய திருத்தலத்தில திருக் கோயில் கொண்டு ''சாதலும் நோத லும் சார்ந்தோர்க்கு இல்லை'' என சேவை சாதித்து கொண்டுள்ளான ஸ்ரீ சக்ரராஜன் (திருவாழிகேசன, ஹேதிராஜன்).

முன்பு ஜலந்தரராசுரனை அழிக்கும் பொருட்டு ஸ்ரீ சாரங்கபாணியால் அனுப்பி வைக்கப் பெற்ற திருச் சக்கரம் பாதாள உலகத்தில் அசுரர் களை அழித்துக் கும்பகோணத்தில் காவிரியில் பூமியைப் பிளந்து கொண்டு வெளிக்கிளம்பி வந்தது. வெளிக்கிளம்பி வந்த ஸ்ரீ சக்கரம் "செய்த நல்விரதமெல்லாம பலிக்க'' என்றோர் புண்ணியதலமான கும்ப கோணத்தில் காவிரிக் கரையில் யாகம் செயது காவிரியில் மூழகிய பிரம்மதேவன் கையில்வந்தமர்ந்தது. இதனால் பெரு மகிழ்சசியடைநத பிரம்ம தேவனும் ஸ்ரீ சக்கரத்தைக காவிரிககரையிலேயே பிரதிஷ்டை செய்து அனுதினமும் பூஜிதது வந தான. காவிரியின் தென கரையில பிரம்மதேவனால பிரதிஷ்டை செய யப்பட்ட ஸ்ரீ சககரமும மிகுநத ஒளி யுடன் விளங்க, சூரிய பகவான் ஸ்ரீ சக்கரத்தின ஒளியைக் கண்டு, 'என்னைவிடவும ஒன்று அதிகமாக ஒளிர்வதா?' என்ற ஆணவததில் மேலும் மேலும் தனனொளியைக் கூட்ட ஸ்ரீசக்கரம் பேரொளிவிடுத்து ஆதவனின் ஒளியைத் தன்னொளி யால் அடக்கி, ஆதவனின் ஆண வத்தை அடக்க சூரியன ஒளியும், பலமும் அற்றவனாகவும் ஆனான்.

ஒளியிழந்த சூரியன் தன்னொளி தனக்கு மீளவும் கிடைக்க ஸ்ரீ சக் கரத்தையே சரணடைநது பிரார்த் தித்து வைகாசி மாத பௌர்ணமி திதியில ஸ்ரீ சககரததிலிருந்து மூன்று கணகளுடனும் அக்னி மயமான கேசத்துடனும் அருட்காட்சி தநது ஆதவனின் ஒளியை மீளவும அருள செய்தார். ஆதவனும், ஸ்ரீ சககர ராஜனுக்கு ஆலயம் நிர்மாணிதது பாஸ்கரஷேத்திரம் என்றும் திவ்விய திருநாமம் இத்தலத்திற்கு வழங்க வரம் பெற்றான். சூரியனும வைகாசி மாதத்திலகொடியேறறிபாஞ்சராதர ஆகமமுறைப்படி உற்சவமும் செய் வித்தான். இன்றும் ஸ்ரீசக்கரம் காவிரியில் தோன்றிய இடம் சக்கர தீர்ததம் என்றும்சக்கரப்படித்துறை என்றும் அழைக்கப்படுகின்றன.

திருத்தல மூர்த்தி பெருமை:

இவ் திவ்விய திருத்தலத்தில் ஸ்ரீ சக்ரபாணி ஸ்ரீ சுதர்ஸனவல்லி, ஸ்ரீ விஜயவல்லி தாயார்களுடன் எழுந் தருளியுள்ளார்.

இந்தத் தலத்தில் நியமத்துடன் திருசசுற்றும் (பிரதட்சணம) அங்கப் பிரதட்சணமும் செய்பவர் எண்ணிய படி எண்ணியாங்கு எய்துவர். திரு மண பாக்யம, புத்ர பாக்யம பெற வும, நோயகள நீஙகி நலவாழ்வு வாழவும் இததிருததலததில் திருச் சுற்று சுற்றுவோர் நெய விளக்கேற்றி வழிபட்டு வருவது சாலச் சிறநத தாகும்.

முககண் முதல்வனாக இறைவன் இததிருத்தலத்தில் எழுந்தருளியிருப் பதால குங்குமம, துளசி, வில்வம், புஷ்பம், வன்னிபத்ரம் அர்சசனை

திரு. இல. பாஷ்யம்,
கும்பகோணம்.

நடைபெறுகின்றது. இத்திருமூர்த்தி யைச சூரியன், பிரமன், மார்கண் டேய மகரிஷி, அஹிர்புதனிய ரிஷி, அக்னி பகவான, அஷ்டதிக் பாலகர் கள் முதலியோர் வணங்கி வழிபட்டு அருள பெற்றுள்ளனர்.

திருமழிசை ஆழ்வார் இத்திரு மூர்ததியை,

'' தூய்மை யோகம் ஆயினாய் துழாய் அலங்கல்மாலையாய்
ஆமையாகி ஆழ்கடல் துயின்ற ஆதி தேவ! நின்
நாமதேயம் இன்னதென்ன வல்ல மல்ல வாகிலும்'!
சாமவேத கீதனாய சக்ரபாணி யல்லையே !!

என்று பாடிப் பரவியிருகின்றார். உட் பிரகாரத்தில் உள்ள ஸ்ரீலக்ஷ்மி நர சிம்மர், விநாயகர், பஞ்சமுக ஆஞ்ச னேயர், சிறப்பும் பெருமையும் பெற்று விளங்கும் அமைப்புடை யவர்கள்.

தீர்த்த மகிமை:

இத்தலத்து சக்ர தீர்த்தம் பெரு மையில் காசியிலும் வீசம் பெரிது என பேசப்படுகிறது. வேதாரண்யத் தில் சூரியபநது என்ற அந்தணர் ஒருவர் தம் தந்தையின் அஸ்தியை கலசத்திலிட்டுக் கங்கையில் கரைக்க வேண்டி அஸ்திகலசத்துடன் தம் சீடன் ஒருவனையும் அழைத்துக் கொண்டு கால் நடையாக செல்லுங் கால் கும்கோணத்திற்கு வந்தடைந் தார். அங்கு சக்ரபடித்துறையில் காவிரியில் சந்தியாவந்தனம் செய்ய வேண்டி அஸ்திக் குடத்தை வைத்துச் செல்ல, தமமுடன் வநத சீடன் பசி யின் மிகுதியால் அக்குடத்தில் ஏதே னும் பட்சணம் இருக்குமென்று

(36-ம பக்கம் பார்க்க)

# ○ ○ ○ ஓஜஸ் ○ ○ ○

ஒரு யோகி கஷ்டப்பட்டு எதைப் பெறுகின்றான் என்றால் ஓஜஸைத் தான. ஓஜஸ் என்பதை ஆண்டவனுக்கு நிகரெனக கொள்ளலாம. ஓஜஸ் என்பது ஒரு ஆன்மீக வலிமையாகும்.

ஒரு யோகி மூலாதார குணடலினி சக்தியை எழுப்பி சுவாதிஷ்டானம் மணிபூரகம், அனாதகம், விசுததி, ஆகஞை வழியாக கொண்டு செனறு ஏழாவதாக உள்ள ஆயிரம் இதழ்களைக்கொண்ட தாமரையாகிய அகஸ ராரத்திற்குக கொண்டு செனறால் அந்த யோகி ஓஜஸை பெறறவன ஆகிறான். இந்த முறையாக ஒரு யோகி ஓஜஸை பெறுகிறான். இநத ஓஜஸை கொண்டுஅந்த யோகி பிரபஞ்சததின் உண்மைகளை சூட்சும ரீதியில அறிய முடியும்.

எபபடிப் பெறுவது?

ஒரு மனிதன மேடையேறி பலமணி நேரம பேசுகிறார் இருநதாலும் நம் மனதில் அந்தப் பேசசை ஏறறமுடியவில்லை இனனொருவர் வருகிறா. இரணடு வாாதைதகளை மட்டும் பேசுகிறார் எல்லோரும் அவா வசமாகி விடுகின்றனா சுவாமி விவேகானந்தரின, 'Sisters and brothers' எனற இரண்டு வார்த்தைகள் அமெரிக்கர்களையே அவாபால் ஈாதது விட்டது.

இப்படி இரணடு பேசசாளர்களின இடையேயுள்ள வித்தியாசம என்ன? முன்னவரிடம குறைவாக ஓஜஸ் இருப்பதால், அவர் கருத்தினை ஏற்க முடியவில்லை. ஆனால் பின்னவரின் ஓஜஸ்தான் அவருக்கு மக்கள் மதிப்பு அதிகம் பெற வாய்ப்பாகியது.

இதற்குக் காரணமென்ன? முன்னவா தன எணணஙகளில், கருத்துக்களில தீவிரமிலலை. பின்னவரின தீவிரம் அவருக்கு ஓஜஸாகிறது. ஓஜஸ் என்பது ஓர் இயக்கும பொருளாகும்.

ஒரு தலைவன், ஒரு அறிஞன் மற்றவாகளைத தன் வழியே ஆட்டி வைக்கிறான். எபபடி? தன எண்ணங்களை அவன தீவிரப்படுததுகிறான் அதனால் அவனைச சுற்றி, ஒரு atmosphere உருவாகிறது. அபபோது அந்த எண்ணங்களே அவனாகிறான். அவனுக்குச் சமமாக, ஒதத எண்ணமுளளவர்கள் அவனால் ஈர்க்கபபடுகின்றனர். இதுதான ஓஜஸ்.

**திரு. எஸ். ஜே. அருண்குமார்**
**கும்பகோணம்**

அதனால்தான் பகவான் உரைத்தார்; ''எவனொருவன் தன கடமையைச் சரிவர செய்து சஞ்சலமில்லாமல் வாழ்கிறனோ அவன் என்னவனாகிறான்'' என்றார். ஓஜஸ் என்பது இறை ஆற்றல தானே!

தூய எண்ணங்களாலும், திடமான சிந்தையாலும், அதில் ஒருமையாலும் ஓஜஸ சேர்வது வெகு சுலபம்.

ஓஜஸ சேரும விதம :

காந்திஜி இளமையில் அழகற்றவராக இருந்தார். ஆனால் அவரின் கடைசி காலங்களில் அவரிடமிருந்த ஓர் ஓஜஸ எவருக்குமிருநததில்லை.

ஒவ்வொரு மனிதனிடத்திலும், ஓஜஸ் குறைவாகவோ அதிகமாகவோ சேமிதது மூளையில் வைக்கப் படுகினறன. உடலிலேயுள்ள அதியுயர்நத வலிமைகள் எல்லாம் ஓஜஸ் தான. அவையெல்லாம் ஒன்றே.



இந்த உலகில் மின சக்தியாக, காந்த சக்தியாக, புவியீர்ப்பு சகதியாகச் செயயப்பட்டுள்ள சகதிதான், ஓஜஸ் என மனித உடலில அமைந்துள்ளது.

எதை ஒனறை அடககினுலும் அதற்கு வீரியமதிகம சாதாரண காற்றுல் ஒரு பொருளை தளள கூட முடியாது. ஆனுல் அழுததப்பட்ட காற்றுனது (Compressed air) ஒரு வெற்றிடததின் வழி வருகையில் அது மலைகளைககூடப் பொடியாககி விடும்.

அதுபோல்தான் மனிதனின் காம இச்சை கூட. அது அடககி ஆளப்பட்டால அதுவே ஓஜஸாக மாறிவிடும். மதுரையை எரிததது கணணகியா? இல்லவே இல்லை. கணணகியின கறபொழுககமதான் எரித்தது!

பிரம்மசாரிகளிடம கற்பொழுக்கம மிகுதியாதலால் அவர்களுககு ஓஜஸ் அதிகமாயுளளது

**ஓஜஸ ஏன பெற வேண்டும?**

ஒரு மனிதன் புறத்தில் நிகழும் எல்லா செயலகளிலும் பங்குகொண்டு துனபம் வந்தால உலகை வெறுத்தும் இனபம் வந்தால் தன்னை மறந்தும் இருந்தால் அவன் சராசரிமனிதனுக்குச் சமமானவன்தான்.

அப்போது அந்த மனிதன இயஙகுபவனுக உள்ளான். இன்ப துனபங்களில அவன் ஊசலாடுகிறுன். அதே மனிதன், இநதிரியஙகளை அடககி மனசை நிறுததி காமயோகம புரிநதாலோ அவன் அப்போது ஓஜஸை பெறுகிறுன. அவன் அச்சமயம புறச் செயல்களால பாதிக்கபபடுவதில்லை. அதனுல அவன் இயககுபவனுக ஆகிறுன்.

உலகததில் வரலாறு எனபது தஙகளிடையே நமபிக்கை கொண்டிருநத ஒரு சிலரின் வரலாறுதான் என்று சுவாமி விவேகானந்தரின வாககு நினைவுறததக்கது. அநத சில மனிதர்கள் இனப துனபஙகளால் பாதிக்கப்படாமல தூய எண்ணஙகளால திடபுத்தியால் உலகை மேமபடுத்தினர்.

ஒரு ராமகிருஷ்ண பரமஹமஸரின ஓஜஸதான இந்து மதத்தின மறுமலாச்சி.

ஒரு ஏசுபிரானின் ஓஜஸ்தான ஒரு கிறிஸ்தவ மதம்.

ஒரு நபிகள் நாயகரின் ஓஜஸ்தான் முஸ்லீம் மதம்.

காநதிஜியின் ஓஜஸ் தான் இந்திய சுதந்திரம. ஐனஸ்டீனின் ஓஜஸ்தான் சாாபு நிலை தத்துவம்.



**பழனித்திருகோயில் தோற்றம்**
**திரு. எம. எஸ். அசோக்குமார் — சென்னை-15.**

அதனுல உலகத்தை மேம்படுத்த ஒவ்வொருவரும் தமக்கிடப்பட்ட கடமைகளில் சரிவர பஙகாற்றி ஓஜஸை பெற்றுப் பிறரை முன்னேற செய்ய வேண்டும்.

**ஓஜஸ—ஒரு விஞ்ஞானப பார்வை**

பிரபஞசத்தில அடங்கியுள்ள எல்லாமும பிரபஞ்ச இயககததோடு தொடர்பு கொண்டிருககிறது. அதனுல்தான பிரபஞ்ச இயககம சமமாயுளளது. இது விஞ்ஞான உண்மை.

ஆனமீக ரீதியில இதனை நோக்கினுல பிரபஞ்சத் தொடர்பு எனபதை இறைவனேடு நாம கொண்டுள்ள தொடர்பையே விஞ்ஞானம் அப்படி உரைககிறது.

ஒருவன இநத பிரபஞசத் தொடர்போடு எவ்வளவு அதிகம தொடர்பு வைததுள்ளானே அவனுக்கு ஓஜஸ் கூடுகிறது. அதாவது இறைவனேடு தொடர்புடையவர்கள் ஓஜஸை அதிகம பெறுவர்.

ஒரு மனிதன் முட்டாளாகயிருந்தால், அவன் அந்த இயக்கும் பொருளான பிரபஞ்சத தொடர்பில் இளைத்தவனுக இருபபான. அறிவாளி அதிகம தொடாபு உடையவனுகிறுன.

இநத பிரபஞசத் தொடர்பை மனிதன் எபபடி பெறுவது எனில், கீதை காட்டுவது போல் "யோகஸ்த: குரு கர்மாணி", யோகததிலே தொழில புரி.

மனம சஞசலமற்று ஒருமைப்பட்டால, அவன் மனம் பிரபஞ்சத்தோடு தொடர்பு கொளள வாயபபாகிறது.

ஒரு ஞானியை நாம் தரிசிக்கச் செல்கையில் அவரின குடிலை அடைந்தவுடன், ஒரு சுகமான ஆழமான இனபம் நமக்குப் பிறககிறது. இது தான் ஓஜஸ்



# திருப்பெருந்துறை மகாதேவர்

கி.பி. 9 ஆம் நூற்றாண்டில் விஜயாலய சோழன் தஞ்சையைத் தலைநகராக்கிச் சோழப் பேரரசைத் துவக்கினான். இதற்கு முன்பு இதே சோழ நாடு முத்தரையர்களால் ஆளப்பட்டது. அவர்களது கோநகரமாக 'சந்திரலேகை' எனும் பேரூர் திகழ்ந்தது. இது பின்னாளில் (சோழர்கள் காலத்தில்) சந்திரலேகை சதுர்வேதி மங்கலம் என அழைக்கப்பட்டது. புகழ்மிகு இவ்வூரே இன்று 'செந்தலை' என்ற பெயரில் காவிரியின் (குடமுருட்டியின்) தென் கரையில் திருக்காட்டுப்பள்ளி கண்டியூர் சாலையில் திருக்காட்டுப் பள்ளிக்குக் கிழக்காக 4 கி.மீ தொலைவில் திகழ்கிறது.

## திருக்கோயில் :

பொன்னி நதியின் குளிர்வோடு பசுமையான கழனிகள் சூழ, தெங்கும் வாழையும் தெமமாங்குப் பாடக்கதன வெளியில் கதிரவனின் பயணத்தையும் தடுக்கும் உயரிய நிலையில் இராஜகோபுரம் திகழ, ஊரின் நடுவே திருப்பெருந்துறை மகாதேவரின் திருக்கோயில் உள்ளது.

நெடு நிலைக் கோபுரம் கடந்து உள்ளே கிழக்கு நோக்கிய கருவறையில் திருப்பெருந்துறை மகாதேவர் கோயில் கொண்டுள்ளார். இருதள விமானம், கிரீவம், சிகரத்துடன் திகழும் இக்கருவறையை அர்த்த மண்டபமும் முக மண்டபமும் அழகு செய்கின்றன. அர்த்த மண்டப வாயிலில் இரண்டு துவாரபாலர்கள் சிற்பங்களும் இடம் பெற்றுள்ளன.

திருச்சுற்றின் வட பகுதியில் தெற்கு நோக்கிய திருக்காமகோட்டமும் (அம்மன் திருக்கோயிலும்), அத்துடன் இணைந்துள்ள இரண்டு மண்டபங்களும் உள்ளன. மகாதேவர் திருக்கோயில் முன்பாக உள்ள மண்டபத்தின் வட பகுதியில் உள்ள நான்கு கருங்கற் தூண்களில் உள்ள கல்வெட்டுக்களில் தமிழகத்தின் தலைசிறந்த வரலாற்று மாமன்னர்களைப் பற்றிய செய்திகளும், நேமம் எனும் ஊரிலிருந்த ''காளாபிடாரி'' திருக்கோயில் பற்றிய குறிப்புகளும் உள்ளன.

குடவாயில் பாலசுப்ரமணியன்,
தஞ்சாவூர்



இராஜகோபுரம் - செந்தலை

## தலப்பெருமை :

மணிவாசகப் பெருமானுக்கு ஞானக் குருவாக காட்சி நல்கிய திருப்பெருந்துறை மகாதேவர் திருக்கோயில் தற்போது புதுவை மாவட்டத்திலுள்ள ஆவுடையார் கோயில் என்ற திருக்கோயிலாகப் போற்றப் படுகிறது. அதே பெயரில் உள்ள செந்தலை திருப்பெருந்துறை மகாதேவர் திருக்கோயிலுடன் மணிவாசகர் தொடர்பான செய்திகளும் கூறப் படுகின்றன.

தலபுராணம், இங்கு சந்திரரேகை எனும் தாசி, பிரஹச்சந்திர மகாராஜா, பிரம்மா மற்றும் அஸ்வ

மொன்றும் இறைவனை வழிபட்டு தங்கள் சாப விமோசனம் அடைந்த தாகக் கூறுகிறது. தல விருட்சமாக வாகை மரம் போற்றப்படுகிறது. இத்திருக்கோயிலை பிரமமாரண்ய க்ஷேத்திரம் என்று புராண நூல்கள் குறிப்பிடுகின்றன.

## பாரதம் பாடியது :

திருச்சுற்றின் மேற்கு மூலையி லுள்ள கணபதியார் திருக்கோயிலில் மிகத் தொன்மையான கல்வெட்டுள் ளது. இது பாண்டிய மன்னன் மாறன் சடையன் (கி. பி. 765—815) காலத் தியது.

திருப்பெருந்துறை மகாதேவரின் கற்கோயில் சோழப் பெரு மன்னன் முதலாம் ஆதித்தன் காலத்தில்தான் கருங்கற்கோயிலாகப் புதுப்பிக்கப் பட்டது என்பதனை ஆதித்தன் காலத் திய கல்வெட்டுச் செய்திகள், சிற்பங் களின் உருவ அமைதி போன்றவற் றால் உணர முடிகிறது. இம்மன்ன வன் காலத்து கல்வெட்டுக்களால் இத்திருக்கோயிலின் நிர்வாகத்தி னர், மூன்று அறக்கொடையாளர்கள் இறைவன் முன்பு திருவிளக்கு எரிப் பதற்காக அளித்த 15 கழஞ்சு பொன்னைப் பெற்றுக் கொண்டு அதன் வட்டியிலிருந்து தினம் உழக்கு நெய்யூற்றி நுந்தா விளக்கெரிக்க ஒப்புக்கொண்ட செய்தியை அறிய முடிகிறது. இத்திருக்கோயிலில் வைரமேகன் என்பவன் கட்டுவித்த மண்டபத்தில் நாள்தோறும் பாரதம் படித்து விரிவுரை சொல்வதற்காக நந்தீசுவர பட்டனுக்கும், பின்னாளில் இதனைத்தொடர்பவர்களுக்கும் நிலக் கொடை அளித்த செய்தியும் காணப் படுகிறது. இவ்வாறு அளிக்கப்பட்ட நிலம் சந்திரலேகை சதுர்வேதி மங் கலத்தின் 53 ஆம் குடும்பைச் சேர்ந் தது என்ற குறிப்பும் உள்ளது. 53 குடும்பு(வார்டு-வட்டம்)களுக்குமேல் இருந்த இவ்வூர் மிகப் பெரிய ஓர் நகரமாக இருந்திருக்க வேண்டும்.

முதல் ஆதித்தன் காலத்திய பிற கல்வெட்டுகளால் இறைவனின் பூஜை களுக்கு நிலம் அளித்தது, கோயிலில் நிகழ்த்தப்படும் விழாக்களுக்கு அறக் கொடைகள் நல்கியது, நங்கை நல் லாள் ஒருத்தி விளக்கெரிக்க 5 கழஞ்சு பொன் முதலீடுசெய்தது ஆகியசெய்தி கள் காணப்படுகின்றன. பராந்தகன் காலத்தில் "வீர சிகாமணி பேரேரி" என்ற ஏரி வெட்டுவித்துக் கருங்கற் படிகள் அமைக்க 150 ஈழக் காசு களுடன் அறக்கட்டளை ஏற்படுத்திய தையும், ஆதித்த கரிகாலன் காலத் தில் கணபதியார் பூஜைகளுக்கு அளித்த அறக்கொடைகளையும் விவரிக்கின்றன.

## வாகீச சிவனார் :

தென் பிரகாரத்திலுள்ள மிகப் பெரிய சிலையை இதுகாறும் பிரமன் சிலையென்றே வரலாற்று அறிஞர்கள் குறிப்பிட்டு வந்தனர். தாமரை பீடத்தில் ஒரு காலை மடக்கி ஒரு காலைத் தொங்கவிட்ட நிலையில் சுகா சன மூர்த்தியாக அமர்ந்து மேலிரு கரங்கள் அக்கமாலை,ஜலகெண்டி ஏந்த கீழிருகரங்களில் ஒன்றில் தாமரை யும், மற்றொன்று தொடைமீதமர்த் திய நிலையிலும், நான்கு தலைகளுடன் திகழும் இம்மூர்த்தி சிவனாரின் திருக் கோலங்களில் ஒன்றான வாகீச சிவக் கோலம் என்பதை அண்மையில் சிற்ப இயல் வல்லுநர் டாக்டர். இரா நாக சாமி அவர்கள் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய கோல நிலையில் உள்ள சிலைகள் தஞ்சையில் இரண்டும், கண்டி யூரில் ஒன்றும், மேலும் அருங் காட்சியகங்களில் இரண்டும் (இவை யும் தஞ்சைப் பகுதியிலிருந்து சென் றவை) உள்ளன. இவை பல்லவர் களின் இறுதிக் கால சிற்ப அமைதி யுடையவை.

## நியமத்து காளாபிடாரி :

செந்தலையிலிருந்து மேற்காக 5 கல்தொலைவிலுள்ள ஊர் நேமம். இங்கு ஓர் காளாபிடாரி கோயில் மிகச் சிறப்புடன் இருந்தது. இதனை, பல்லவ மன்னன் இரண்டாம் நந்தி வர்மனுடைய படைத்தலைவனாகவும், முத்தரையர்களின் மன்னனாகவும் திகழ்ந்த பெரும்பிடுகு முத்தரை யனான சுவரன் மாறன் எடுப்பித் தான். இதன் பின்பு இப்பிடாரிக்குத் தெள்ளாறெறிந்த நந்திவர்மனான மூன்றும் நந்திவர்மன் கி. பி. 847ல் நிவந்தங்கள் அளித்தான். மாறன் சடையன் என்ற பாண்டியனின் ஆட்சி யில் (கி. பி 872ல்) விடேல் விடுகு முத்தரையனின் அலுவலனால் அறக் கொடைகள் அளிக்கப்பட்டன. சோழப் பெருமன்னன் முதல் ஆதித் தன் காலத்தில் (கி. பி. 889ல்) மூன் றும் நந்திவர்மனின் தேவி அடிகள் கண்டன் மாறன் பாவை பிடாரி யாருக்கு நுந்தா விளக்கெரிக்கப் பொன் வழங்கினாள்.

பல்லவர்கள், முத்தரையர்கள், பாண்டியர்கள், சோழர்கள் காலத் தில் சீரும் சிறப்புடன் திகழ்ந்த இத் திருக்கோயில் யாது காரணத்தாலோ முற்றிலும் அழிந்துவிட்டது. ஆனால் இத்திருக்கோயிலை சுமந்து நின்ற நான்கு தூண்கள் மட்டும் இன்று இடம் பெயர்ந்து செந்தலை கோயி லில் தஞ்சம் புகுந்து தன்மீதுள்ள கல்வெட்டுக்களின் துணையோடு எஞ் சிய வரலாறு பேசி நிற்கின்றன.

திருப்பெருந்துறை மகாதேவர் என்க் கல்வெட்டுக்கள் குறிப்பிடும் இறைவனை தற்போது சுந்தரேசுவரர் என அழைக்கின்றனர். காலத்தின் சுவடுகள் பல சுமந்து நிற்கும் இத் திருக்கோயில் திருப்பணிகளால் பேண வேண்டிய அவசிய நிலையில் உள்ளது. இங்கிருந்த ஆதித்த சோழன் காலத்து சிற்பங்கள் சில ஏற்கனவே இடம் பெயர்ந்து தஞ் சைக் கலை கூடத்தை அடைந்து விட் டன. நேமத்து காளாபிடாரி கோயி லுக்கு ஏற்பட்ட நிலை இக்கோயிலுக் கும் ஏற்படா வண்ணம் இளைய தலை முறையினர் முனைதல் வேண்டும்.

✱

திருமலை

ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின்

வருடாந்திர

# பிரம்மோற்சவம்

**26-9-84 முதல் 4-10-84 வரை**

30-9-84 கருட சேவை

3-10-84 ரதோற்சவம்

4-10-84 சக்ர ஸ்நானம்.

வாரீர்! வேண்டுவன பெறுவீர்!

# திருவேங்கடம்

நம் பரதகண்டததின் எட்டு திசைகளிலிருந்தும் ஒவ்வொரு நாளும் எந்த திருக்கோயிலிலும் காண முடியாத அளவிற்கு ஆயிரக் கணக்கான பக்தர்கள் திருமலை திருப் பதிக்கு வந்து சேர்ந்து திருவேங்கட முடையானை வழிபட்டு நிற்கிறார்கள்.

" குன்ற மேந்திக் குளிர்மழை காத்
தவன்
அன்று ஞாலம் அளந்தபிரான்—பரன்
சென்று சேர் திருவேங்கடமாமலை
ஒன்றுமே தொழ நம்வினை ஓயுமே"

என்கிற திருவாய் மொழி பாசுரத் தின் நிருபணமாகவே பக்தர்கள் தம் வினைகளை எல்லாம் அறவே போக்கிக் கொண்டு தெய்வ வடமலையானின் திருவருளால் நல்வாழ்வு பெற்றவர் களாகவே விளங்கி வருகிறார்கள் என பது உலகமறிந்ததே.

பக்தர்களின் கூட்டம் ஒருகால விசேஷத்தில்தான் கூடுகின்றது என் றும் மற்ற நாட்களில் இல்லை என்றும் சொல்லுவதற்கு இடமில்லாமல் சென்ற காலததிலும் நிகழ்காலத் திலும எலலா காலங்களிலும் பக்தர் கள திரள்திரளாக 'க்யூ' வரிசையில் நின்று பகல இரவு எலலா நேரங்களி லும் நாளதோறும் தரிசித்து இன் புறும் இந்த அற்புதக காட்சி ஒன்றே திருவேங்கடமலையின் தனிச் சிறப் புக்கு நிருபணமாக நிலைத்து நிற் கின்றது.

கோவிந்தா! கோவிந்தா! கோவிந் தா! கோவிந்தா! என்கிற தெய்வ கோஷங்களுடன் பக்தாகள் திருவேங் கடத்தில் வழிபடும் காட்சி, திருமலை திருப்பதியையே பரம பதமாகக் கொண்டு திருமால் திருமலையில் கோயில்கொண்டு திருவேங்கடமுடை யானாக ஸேவை தந்தருளி எல்லோ ருக்கும் அருள்பாலித்த வண்ண மாகவே எழுந்தருளியிருக்கிறான் என்றே கொள்ளத்தக்கதாய் விளங்குகிறது.



" அத்தம் நண்ணிய அம்குடிச்சிறூர்
கொடு நுண்ஓதி மகளிர் ஒக்கிய
தொடிமாண் உலக்கைத்தூண்டு உரல்
பாணி
நெடுமால் வரைய குடிஞையோடு
இரட்டும்
குன்றுபின் ஒழியப் போகி"
(அகநானூறு)

திரு. வி ரங்கசாரி-சீர்காழி.

இப்பாடலில "நெடுமால் வரைய- குன்று ஒழியப் போகி" என்னும் தொடரால் நெடுமாலாகிற திருமால் எழுந்தருளியிருக்கும வேங்கடக்குன் றையும் கடந்து தான் சென்றதாகத் தலைவன் குறிப்பிட்டான். தலைவன் வேங்கடமலைக்கும் அதைக கடந்து அப்பாலும் சென்று பொருளீட்டி வரு வது என்னும் மரபு அகநானூற்றின் பல பாடல்களில் காணப்படுவதால், இங்கு வேங்கடமலையைக் குறிப்ப தாகத்தான் கொள்ள வேணும். அகநானூற்றின் அறுபத்தோராம் பாடலில் "விழவுமலி வேங்கடம்" என்று இருப்பதும் இதை வலியுறுத்து கிறது. இப்படிப் பலபடியாக சங்க கால தமிழ் நூல்களின் வாயிலாக வேங்கடத்தின் தொன்மையை நாம் நன்கு அனுபவிக்க முடிகிறது.

பர, வ்யூஹ, விபவ, அந்தர்யாமி, அர்ச்சாவதார என்கிற ஐவகைப்பட் டிருக்கிற பகவத் ரூபங்களில் அர்ச்



அலிபிரி மலையடிவாரம்

சாவதாரமே வழிபாடுகள் செய்ய ப்ராப்தமாய் நமக்கு அமைந்துள்ளது. இந்நிலவுலகிலே எம்பெருமான் அர்ச்சையில் எழுந்தருளியிருக்கும் திருப்பதிகள், திவ்ய தேசங்கள் என்றே ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் வழங்கப்படுகின்றன. இந்த திவ்ய தேசங்கள் ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பட்டவைகள். ஆகவே திவ்ய தேசமூர்த்திகளுக்கு (எம்பெருமான்களுக்கு) அர்ச்சாவதாரம் என்று பெயர்.

ஸௌலப்யாதி குணங்கள் பூர்ணமாயிருக்கப் பெற்ற இந்த அர்ச்சாவதாரத்திலேயேதான் ஆழ்வார்கள் சரணாகதியை செய்தருளினார்கள். கைங்கர்யானுஷ்டானமே அர்ச்சாவதார ஆராதனம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.


துவஜாரோஹணம்

'' ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்''

என்பதாக திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ஸகலவித கைங்கர்யம் ப்ரார்த்தனையை அருளிச் செய்கிறார் நம்மாழ்வார்.

எங்ஙனம் பராங்குச, பரகால, யதிவராதிகள் என்று ஆழ்வார்-ஆசார்யர்களில் நம்மாழ்வார், திருமங்கையாழவார், எம்பெருமானார் என்கிற மூவரையும் மிகமிக முக்கியஸ்த்தர்களாக ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் பெருமையாகப் பேசப்படுகின்றதோ, அங்ஙனமே திவ்ய தேசங்களில் கோயில், திருமலை, பெருமாள் கோயில் என்று இம்மூன்று திவ்ய தேசங்களையும் மிகமிக முக்கியமானதாகக் கொள்ளப்பட்டுள்ளது. இம்மூன்றினுள்ளும் இப்பொழுது திருமலை திருப்பதியாகிற திருவேங்கடத்தை அனுபவிக்க இருக்கிறோம்.

'' வானோர்க்கும் மண்ணோர்க்கும்
வைப்பு''

என்கிற திருமழிசைப்பிரான் பாசுரத்தின்படி திருவேங்கடமுடையான் பக்கலில் விளங்கும் திருக்குணம் ''வாத்ஸல்யம்'' என்றே சொல்லப்பட்டுள்ளது. மேலும் இப்பாசுரத்தின்படி உபயவிபூதியிலுள்ளார்க்கும் (நிலவுலகுக்கும் வானுலகுக்கும்) சேமித்து வைத்த நிதி போன்றது திருமலை என்று சொல்லப்படுகின்றது. நிதி ஒருவர் கண்ணுக்கும் புலப்படாமல் மறைத்து வைத்து காப்பாற்றப்படுவது. இதனால் நிதியாக சொல்லப்பட்ட திருவேங்கடமுடையானை அந்தர்யாமியாகவும கொள்ளத்தகும் எனபதே பெரியோர்களின் திருவுள்ளம்.

கடோபநிஷத்தில் (2-4-12)

'' அங்குஷ்டமாத்ர: புருஷோமத்ய
ஆத்மநிதிஷ்டிதி,
ஈசாநோபூத பவ்யஸ்யநததோ விஜு
குப்ஸதே''

என்றுள்ளதுக்கானது சரீரதோஷங்களும் எம்பெருமானுக்கு போக்யமாகின்றனவென்பதைக் காட்டி நிற்கின்றது. இவ்விடத்திற்கு ரங்கராமானுஜ ஸ்வாமியின் பாஷ்யத்தில் ''பூத பவ்யேச்வரத்வாதேவ வாத்ஸல்யாதி சயாத் தே ஹசுதாநபிதோஷாந் போக்யதயா பச்யதி இத்யர்த்த:''


ஹம்ஸ வாகனம்

என்றுரைத்தார். தோஷ போக்யத்வத்தை 'மங்க வோட்டுன் மாமாயை' என்கிற பாட்டிலே ஆழ்வாரும் விளங்கவுரைத்தருளினார். மிகமிக அருவருக்கத்தக்கதான தேஹதோஷங்களே போக்யமாகிறதென்று உபநிஷதாதி ஸித்தமாம்போது, செய்கைத் தவறுகளான தோஷங்கள் ப்ரீதியின் கனத்தால் போக்யமாகின்றனவென்னும் விஷயம் உணரத்தக்கது.

நிகரில் புகழென்று வாத்ஸல்யத்திற்குத் திருநாமம். திருவேங்கடமுடையானிடத்தில் நம்மாழ்வார் இந்த வாத்ஸல்ய குணத்தை 'நிகரில் புகழாய் — திருவேங்கடத்தானே' என்கிற பாசுரத்தால் அனுபவிக்கிறார். நிகரில் புகழ் என்று வாத்ஸல்யத்தையே சொல்லப்படுகின்றது. மற்ற திருக்குணங்களுக்கு நிகருண்டு. வாத்ஸல்யத்திற்கு நிகரே கிடையாது. தோஷத்தை தோஷமாகவும், குணத்தை குணமாகவும், எடுத்துக்

கொள்பவர்கள் சிலர். குணத்தையும் தோஷமாகவே எடுத்துக்கொண்டு பறை சாற்றுவர் பலர் தோஷத்தையும் குணமாக எடுத்துக்கொண்டு அனுபவிப்பதே வாத்ஸல்யமாகும். ஆகவே இந்த வாத்ஸல்யத்திற்கு நிகரில்லை என்றே சொல்லப்படுகின்றது. ஆனது பற்றியே ஸ்வாமி எம்பெருமானுர் கத்யத்தில அகிலேத்யாதி மஹா சூர்ணையில் 'அபாரகாருண்ய ஸௌசில்ய, வாத்ஸல்ய, ஔதார்ய, ஐச்வர்ய ஸௌந்தர்ய மஹோததே'' என்று வாத்ஸல்யத்தையிட்டு அருளிச செய்த பின்னையும் மீண்டும், 'ஆச்ரித வாத்ஸல்யைக ஜலதே!'' என்று தனிப்படவும் இட்டருளினுர்.

'அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறை மார்பா' என்று ஆழ்வார பெரிய பிராட்டியாரை முன்னிட்டுத் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ப்ரபத்திபண்ணுகிறபோது அடுதத இரண்டாமடியில் எம்பெருமானை ''நிகரில் புகழாய்'' என்று ஸம்போதிததிருக்கிருர். ஒப்பற்றவொரு திருககுணத்தையுடையவனே எனகிருர். அந்த திருக்குணம் எதுவாக இருக்குமென்று ஆராய்ந்தால் ப்ரகரணத்தை யநுஸரித்து வாத்ஸல்யமே அது என்று எமபெருமானுர் திருவுள்ளம் பற்றுகிருர். தோஷபூயிஷ்டனுன சேதநன் பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாக வரிப்பது எதற்காக வென்னில்



கல்ப விருக்ஷ வாகனம்



திருச்சி உற்சவம்

தன்னுடைய தோஷங்களைக் கண்டு எம்பெருமான் தன்னை நிக்ரஹித்தருளாமைக்காகவன்றே! அப்பிராட்டியினுடைய புருஷகார பலத்தாலே திருவேங்கடமுடையானிடத்தில் முதன் முதலாக எந்தத் திருக்குணம் விகாஸமடைகின்றதென்னில், வாத்ஸல்ய குணமேயாம்.

ஆக இப்படி அந்தர்யாமியின் குணமாகக் கடவல்லீ ஸித்தமான வாத்ஸல்ய மஹா குணத்தை நமமாழ்வார் திருவேஙகடமுடையான் பககலிலே அனுபவித்தாராயிற்று.

ஆழ்வார்களில் தொணடரடிப்பொடி ஆழ்வார், மதுரகவி ஆழ்வார் நீங்கலாக மறற ஆழ்வார்களாலும், ஆண்டாளாலும் மஙகளா சாஸனம் செய்யப் பெற்றதே திருவேங்கடம் என்னும் திவ்யதேசம.

திருவேங்கடமுடையான் விஷயமாக நம்மாழ்வார் இரணடு பதிகங்களும், குலசேகர ஆழ்வார் ஒரு பதிகமும், திருமங்கையாழ்வார் நான்கு

பதிகங்களும் பாடி மங்களாசாஸனம் செய்துள்ளார்கள். மற்ற ஆழ்வார்கள் பாசுரங்களாலே மங்களாசாஸனம் செய்துள்ளார்கள. பத்து பாசுரங்களை கொண்டதே ஒரு பதிகமாகும்.

திருவாய்மொழியில் ஆரும்பததில் ஈற்றுப்பதிகம ''உலகமுண்ட பெருவாயா'' என்னும் திருவேங்கடமுடையான் விஷயமான பாசுரம. திருவாய் மொழி மூன்ருவது பத்தில் மூன்ரும் பதிகமான "ஒழிவில் காலமெல்லாம்'' என்கிற பதிகமும் திருவேங்கடமுடையானைப் பறறியதே. "ஒழிவில் காலமெல்லாம்'' எனனும் பதிகம் த்வயம் எனனும் மந்திரத்தின் உத்தரகாண்டததின பொருளைப் பேசுவதென்றும "உலகமுண்ட பெருவாயா'' என்னும் பதிகம் த்வயத்தின் பூர்வ காண்டததின் பொருளை பேசுவதென்றும் ஸம்ப்ரதாய நிர்வாஹம்.

திருவாய் மொழியில் ஒரு பதிகத்திற்கும் அமையாத அதிசயம் ஒன்று ''உலகமுண்ட பெருவாயா'' என்னும் பதிகத்திறகு அமைந்துள்ளது. அஃதாவது என்னென்னில் ஒவ்வொரு பாட்டிலும் விடாமல் திருவடியைப் பற்றின சொல் அமைந்திருப்பது நோக்கத் தக்கது. முதற் பாட்டில்,

' குலதொல்லடியேனுனபாதம்
கூடுமாறு கூறுயே'
' ஆருவன்பினடியேன் உன்னடிசேர்
வண்ணமருளாயே'
' அண்ணலே உன்னடிசேர அடியேற்கு
ஆவாவென்ருயே'
' பூவார் கழல்களருவினையேன் பொருந்
துமாறு புணராயே,
' திணரார் சார்ங்கத்துனபாதம் சேர்
வதடியேனெந்நாளே'
' மெய்ந்நாளெய்தி யெந்நாளுன்னடிக்
கணடியேன் மேவுவதே'
' நொடியார் பொழுதுமுடை பாதங்
காண நோலாதாற்றேனே'
' நோலாதாற்றேனுன பாதங் காண'
' அந்தோ அடியேனுனபாதம் அகலகில்
லேனிறையுமே'



ஊஞ்சல் சேவை

' புகலொன்றில்லா வடியேனுன்னடிக்
கீழமர்ந்து புகுந்தேனே'
' அடிக்கீழமர்ந்து புகுந்து அடியீர்
வாழ்மின்'

ஆக இப்பதிகம் முழுவதும் திருவடி சம்பந்தம் இடையருது வரப் பெற்றதென்னுமதிசயம் அனுபவிக்க தக்கது

இதற்கொரு முக்கியமான விசேஷமுணடு. அதாவது "முமுக்ஷுவுக்கறிய வேண்டும் ரஹஸ்யம் மூன்று'' என்று சொல்லப்பட்ட திருமந்திரம், த்வயம், சரம ஸ்லோகமாகிற மூன்று ரஹஸ்யங்களில் திருமந்திரத்திலும், சரமஸ்லோகத்திலும் திருவடியைப்



வசந்தோற்சவம்

பற்றின பேச்சே கிடையாது. அஃதுள்ளது மந்திர ரத்னமென்கிற த்வயத்தில் மட்டுமேயாம். அந்த த்வயத்தின் அர்த்தானுஸந்தானபர மான இவ்வுலக முண்ட பதிகத்தில் திருவடியின் ப்ராதாந்யத்தை ஆழ் வார் இங்ஙனே காட்டியருளினது மிகமிக அற்புதம். அனறியும் மற்ற இரண்டு ரஹஸ்யங்களிலும் பிராட்டி யின் ஸம்பந்தமும் ஸ்பஷ்டமாகத தோற்றிற்றில்லே. அக்குறையும் தீர த்வயத்தில் இரண்டு கண்டங்களினு டையவும் தொடக்கத்தில் ஸ்ரீசப்த வித்யாஸமுள்ளது. அதற்குச் சேர ''அகலகில்லேனிறையுமென்று அலர் மேல் மங்கையுறை மார்பா'' என் றருளிச் செய்தார் ஆழ்வார். அதற்கு இணங்கவே திருவாய்மொழி நூற் றந்தாதிப் பாசுரத்திலும் "அலர் மகளை முன்னிட்டு'' என்றருளிச் செய்தார் மணவாள மாமுனிகள். ''அகலகில்லேனிறையுமென்று'' என் கிற பாசுரத்திஞல் திருவேங்கட முடையான் திருவடிகளில் நம்மாழ் வார் ப்ரபத்தி செய்யுமிடத்து த்வ யத்தின் பூர்வ வாக்கியத்தை அனு ஸந்தித்துக் கொண்டே செய்தார் என்பது அப்பாசுரத்திஞல் ஸ்பஷ்ட மாக விளங்குகின்றது எங்ஙனே யென்னில ''அகலகில்லேன் இறையு மென்று அலர்மேல் மஙகை யுறை மார்பா'' என்பதஞல ஸ்ரீமத் பதார்த்தா அர்த்தானுஸந்தானமே அங்குத் தேறி நிற்கின்றது.

நிகரில் புகழாய் என்று தொடங்கி திருவேங்கடத்தானே என்னுமளவும் நாராயண பதார்த்தத்தின் அனுஸந் தானம், எவ்வாறென்னில் நாராயண பதத்திற்கு வாத்ஸல்யம், ஸ்வாமி த்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம், ஞானம், சக்தி என்னும் ஆறு குணங் களுடைமையே அர்த்தமாதலால் அவைகளைப் பற்றி கீழ்க் கண்டவாறு அனுபவிக்க பராப்தமாகும்.

நிகரில் புகழாய் என்பதே வாத் ஸல்யம் என்றும், உலக மூன்றுடை யாய் என்பதால் ஸ்வாமித்வம் என் பதும், என்னையாள்வானே என்ப தால் ஸௌசீல்யத்தையும், திருவேங்


ஹனுமந்த வாகனம்

கடத்தானே என்பதால் ஸௌலப்யம் என்பதையும், சக்திமான்களான அமரர்களும், ஜ்ஞானவான்களான முனிவர்களும் வந்து தொழுகிறார்கள் என்று தெரிவிக்குமதான ''நிகரில அமரர்'', ''முனிக்கணங்கள் விரும் பும்'' என்கிற விசேஷணத்திஞல் ஜஞான சக்திகள என்றும், ''புக லொன்றில்லா அடியேன உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே'' என்கிற ஈற்றடியிஞல் "சரணௌ சரணம ப்ரபத்யே'' என்பதின தேறிய பொருளே ஆகும என்றே அனு பவிக்கத்தக்கதாகும.


மோகினி அவதாரம்

திருமஙகை யாழ்வாா அருளிய பெரிய திருமொழியில் முதல்பத்தில் எட்டாம் திருமொழியில "கொஙக லர்ந்த மலாக் குருந்தம்'' என்கிற பதிகத்தில் திருவேங்கடமுடை யானின திருநாமம் சொன்ஞருடைய துரிதங்களைப போக்குகைக்காகவே திருமலையிலே எழுந்தருளி ஸன்னிதி ஹிதனுனவஞன திருவேங்கடமுடை யானை, திருவேங்கடம் சென்று சேர்ந்து அவனைத் திருமலையிலே அனு

பவிப்போம் என்று திருவுள்ளத்தோடு கூட்டுகிறதாக அருளிச் செய்கிருர்.

திருமங்கையாழ்வார் அருளிய பெரிய திருமொழியிலேயே முதல்பத்தில் ஒன்பதாம் திருமொழியில "தாயே தநதை எனறும் தாரமே கிளே மக்களென்றும்" எனகிற பதிகத்தில் திருமலேயை ஆஸரயியெனறு சொல்லித் தன்னுடைய நைச்யத்தை அனுஸந்தித்து தமது துர்வ்ருத்தாந்தத்தையெலலாம் விண்ணப்பஞ் செய்து, அவைகளை எல்லாம் பொறுததருளி தனககு ஸ்வருபானுருபமான உயர்கதியை அடைய விசேஷ கடாக்ஷம் பண்ணவேணும் எனறு ஸரணம புகுவதாக அருளிச் செயகிருர்.

மேற்படி பெரிய திருமொழியிலேயே முதல்பத்தில பத்தாம் திருமொழியில் "கண்ணூர் கடல் சூழ் இலங்கைக்கு இறைவன்தன்" என்கிற பதிகத்தில் தன்னிடமுள்ள தோஷங்களேக் காணுக் கண்ணிட்டுத் தன்னிடம் விரோதத்தை நீக்கி திருவருள் புரிய வேணும் என்று பிரார்த்திக்கிருர். இவ்விதம் திருமங்கையாழ்வார அபேக்ஷித்தபடியே திருமங்கை யாழ்வார் திருவுள்ளத்தில் திருவேங்கடமுடையான் எழுந்தருளி பரபக்தியாதிகளேப் பிறப்பித்தானென்று தாமே அருளிச் செய்கிருர்.


ஹனுமந்த வாகனம்

பெரிய திருமொழியில் இரண்டாம் பத்தில் "வானவர் தங்கள் சிந்தை போல என் நெஞ்சமே" என்கிற பதிகத்தில் நமக்கு இப்படி பகவத் ப்ராவண்யம் உண்டாகைக் கடியெனினெஞ்சிறே என்று தம்முடைய திருவுளளததிற்கு ப்ராப்தமான பாக்கிய விசேஷத்தை நிளேத்து நிளேத்து மிகவும் ஸ்லாகித்து உருகுகிருர்.

குலசேகர ஆழ்வார் அருளிச்செய்த பெருமாள திருமொழியில் நான்காம் திருமொழியில் 'ஊனேறு செல்வத்து உடல் பிறவியான் வேண்டேன்" என்ற பதிகத்தில் திருவேங்கடமலேயில் குருகாயும், மீனுயும் பிறக்க வேணுமென்றுதாம் கொண்ட ஆசையைக் கூறியுள்ளார் குலசேகர ஆழ்வார். அப்பிறவிகளும் உடல் பிறவியாகவே யிருக்க, "உடல் பிறவியான் வேண்டேன்" என்று முந்துற முன்னம் அருளிச் செய்தது பொருந்துமா? என்று கேட்க நேரிடும். இதற்கு இருவகையான சமாதானம்.

1. திருமலேயில் பிறப்பது பிறப்பன்று. அது விரஜா நதியைச் சார்ந்த வைகுண்டத்தில் வாழ்வது ஒக்கும் என்று குலசேகர ஆழ்வார் திருவுள்ளம் பற்றினர் போலும்.

2. வெறுமனே "உடல் பிறவியான் வேண்டேன" என்னுமல் "ஊனேறு செல்வத்துடற் பிறவியான் வேண்டேன்" என்றமையால் செல்வம் மிக்க பிறப்பு வேண்டா. மிக்க இழிவான பிறப்பாயினும் திருமலேயில் பிறக்கவமையும் என்பதாக குலசேகர ஆழ்வார் திருவுள்ளம் பற்றிஞர் என்றே கொள்ளத்தகும்.

"ஈசாநாம் ஜகதோஸ்ய வேங்கடபதே: விஷ்ணோ:


கஜ வாகனம்

பராம் ப்ரேயஸீம் தத்வக்ஷஸ் ஸ்தல நித்யவாஸ ரஸிகாம்
தத்க்ஷாந்தி ஸம்வர்த்திநீம், பத்மாலங்க்ருத பாணி பல்லவ யுகாம்
பத்மாஸநஸ்த்தாம் ச்ரியம் வாத்ஸல்யாதி குணோஜ்ஜ்வலாம்
பகவதீம் வந்தே ஜகந்மாதரம்"

பிரதிவாதி பயங்கரம் அண்ணன் ஸ்வாமி அருளிச் செய்த சுலோகம் அலர்மேல் மங்கைத் தாயார் விஷயமான துதி. இந்த சுலோகத்தின் கருத்து பின்வருமாறு:

"இவ்வுலகுக்கெல்லாம் ஈஸ்வரியாயும், திருமலேயப்பனுக்கு ப்ராணவல்லபையாயும், அவனது திருமார்பிலேயே நித்யவாஸஞ் செய்வதில் விருப்பமுடையவளாயும், அப்பெருமானுடைய க்ஷமாகுணத்தை வளரச் செய்பவளாயும், தாமரை மலரினுல் அலங்கரிக்கப்பட்டுப் பல்லவம் போன்ற இரண்டு திருக்கைகளையுடையளாயும், தாமரைத் தவிசிலே வீற்றிருப்பவளாயும் வாத்ஸல்யம் முதலிய குணங்களால் திகழா நின்ற



நிகரில் திருவேங்கடமுடையான் புகழ்பாடி இப்பிரம்மோற்சவத்தில் நாமும் பங்கேற்று அவன் திருவடிகளிலே சரணுகதி பண்ணி நின்ருல், அலர்மேல் மஙகையுறைமார்பனை திருவேங்கடமுடையான் திருவருளால் நொடிப் பொழுதில நம் தீவினைகளெலலாம் ஒழிநது, அவன் திருவருளுக்கே நாம் ஆளாகி நிற்போம் என்பதில ஐயமில்லை.

" கல்யாணுத்புத காத்ராய காமிதார்த்த
ப்ரதாயிநே
ஸ்ரீமத் வேங்கடநாதாய ஸ்ரீநிவாஸா
யதே நம: ।
ஸரிய: காந்தாய கல்யாண நிதயே
நிதயோர்த்திநாம்
ஸ்ரீ வேங்கட நிவாஸாய ஸ்ரீ நிவாஸாய
மங்களம்." ॥



பிரம்மோற்சவத்தில் ஒரு நிகழ்ச்சியான ஸ்ரீராம பட்டாபிஷேகம்

வளாயும், பரம பூஜ்யையாயும் உலகுக்கெல்லாம் தாயாயும் இருக்கின்ற அலர்மேல் மங்கைப் பிராட்டியை அடியேன் வணங்குகின்றேன்".

ஆக இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த அலர்மேல் மங்கைத் தாயாரைத் தொழுகின்றேன் எனறவாறு, இவ்விதம் திருவேங்கடத்தின பெருமையை ஆழ்வார்களின் அருளிச் செயல்களைக் கொண்டு அனுபவித்தோம்.

ஆக இப்படி பகலும் இரவும் திருவேங்கடத்தில் படிந்து குடைந்து



சக்ர ஸ்நாநம்

# ★ பீஷ்மரின் தனிப்பெருமை ★

மோக்ஷததிற்கான வழியை மைத்ரேயீ கேட்டதும் யாஜ்ஞவலக்யர் பெரிய தர்ம சங்கடத்தில மாட்டிக் கொண்டார். வேதாந்த ச்ரவணத்துக்கு முற்றிலும பரிபக்குவமான மைத்ரேயிக்கு அதை உபதேசம் செய்ய மறுபபது தகாது. உபதேசித்தேயாக வேணடும். இத்தனை காலம் கணவனும மனைவியுமாக இனிது வாழ்நது வந்த தம்பதிகள், இனறு முதல் துறவு பூண்டுக் காவியுடுத்து (இணை பிரியாமல்) வேதாந்த ச்ரவணத்துக்காக ஆசாரியனும் மாணவியுமாக மாறிவிடுவது அவ்வளவு எளிதல்லவே! இந்தச் சன்னியாசம் வெகு சீக்கிரத்தில் போலியாகி உலகம் எள்ளி நகையாடும் நிலை தோன்றி விட்டால்?? இதுதான் தர்ம சங்கடமான நிலைமை.

அப்படி ஒருக்காலும் நடவாது. இருவரும பழுதத ப்ரமமஜ்ஞானிகளல்லவா? உறுதி குலையுமா?

பரமசிவன இவ்வாறுதான் உலக வாழ்ககையை வெறுத்துத் தளளி விட்டு இமய மலையில் தவம செய்து வந்தார. அவரையே கணவனுக வரித்தாள பார்வதி. தவம் செய்யும் அவருககுப் பணிவிடைகள் செய்து கொணடு அவருடனே நெருஙகிப் பழகி வநதாள் இதெல்லாம அவருக்கு வெகு நன்ருகத் தெரியும. ஆனுலும் தனது தளராத உறுதியையுணர்ந்து, அவளைப் பணிவிடைகள் செய்ய அனுமதித்தார். உறுதி குலையும்படியான சந்தர்பத்தில் அகப்பட்ட பிறகும் பழைய நிலையிலேயே நீடித்திருப்பதில்தானே மகான்களில் தனிப்பெருமை காணக் கிடக்கின்றது!

இதெல்லாம் சரி தான். முடிவு என்ன? பார்வதிக்குத்தான் பூரணமான வெற்றி சிவனுக்குப் படுதோலவியேதான். இருவரும் தமபதிகளாகி விட்டனர்!!

யாஜ்ஞவல்க்யருக்கு இதெல்லாம் வெகு நனருகத தெரியும. அவர் மனத்தில் இவ்விஷயங்களெல்லாம் மின்னல் வேகத்தில் தோனறி மறைந்தன. ஒருவாருகத் தேறி மைத்ரேயியைப் பார்த்துப் புகழ்ந்துரைத்து உபதேசம் செய்யவாரம்பித்தார்.

प्रिया बतारे नस्सती प्रियं भाषसे ।
(ப்ரு. உப. 4. 4)

''எனனிடம் அனபு மிக்கவளான நீ இனிமையாகவே பேசுகிருய்'' என்று அவளைப் புகழ்ந்துரைத்தார்.

एह्यास्स्व ! व्याख्यास्यामि ते । व्याचक्षाणस्य तु मे निदिध्यासस्वेति ।

''வா. உட்கார். உனக்கு உபதேசம பண்ணுகிறேன். நான் உபதேசம் பணணும்போது நீ கவனமாகக கேட்க வேணும்'' எனறு சிறு முன்னுரையுடன் உபதேசத்தைப் பணணவாரமபித்தார்.

आत्मा वा अरे ! द्रष्टव्यः श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यः ।

எனபதுதான அவர் உபதேசமாகச் சொன்ன வாககியம்.

''அடீ! ஆத்மாவைத் தானபாரகக வேணும். கேட்க வேணும். சிந்திகக வேணும். த்யானிக்க வேணும'' என்பது இதன் சுருககமான கருதது.

யாஜ்ஞவல்க்ய முனிவர், மைத்ரேயிக்கு இநத உபதேசத்தை எடுத்த எடுப்பில பண்ணி விடவில்லை. நீண்ட உபன்யாஸமொன்றைப் பண்ணி, அதன் முடிவிலேயே மேற்படி உபதேசத்தைப் பண்ணிஞர்.

உலக இயற்கையை உள்ளவாருகவே நன்ருக மனத்தில் பதிய வைக்க வல்லதாக அந்தச் சொற்பொழிவு அமைந்துள்ளது. அதன் மூலம் லௌகிகமான விஷயங்களில்(ஸ்திரத்தன்மையில்லாமையால்) வெறுப்பு தோன்றும். பிறகு செய்யப்படும் உபதேசம் பசு மரத்தாணி போல் ஆழப் பதிந்து நிலைத்து நிற்கும் என்பது குறிக்கோள்.

न वा अरे ! पत्यु. कामाय पतिः प्रियो भवति,
आत्मनस्तु कामाय पतिः प्रियो भवति ।
न वा अरे ! जायायै कामाय जाया प्रिया
भवति, आत्मनस्तु कामाय जाया प्रिया भवति ।

என்னுமிவ்விரண்டு வாக்கியங்களும் அந்த உபன்யாஸத்தின் தொடக்கத்திலுள்ளன. இவை போல் மற்றும் எட்டு வாக்கியங்கள் இதிலுள்ளன. பிறகு முன் காட்டின உபதேசம் செய்யப்படுகிறது.

---

நாவல்பாக்கம் ஸ்ரீ தேவநாதாச்சாரியர்,
திருப்பதி.

---

இந்த முதலிரண்டு வாக்கியங்களால் யாஜ்ஞவல்க்யர் மைத்ரேயிக்குச் சொல்லுவதென்ன? "கணவனிடம்(இந்த வாக்யங்களுக்குப் பல பாஷ்யகாரர்களும் பல வகையாக அர்த்தம் சொல்லியுள்ளனர். அவற்றும ஏதோ ஒரு வழியில் நாம் சொல்லுகிருேம்.கருத்துவேறுபாடுள்ளவர்கள இதை ஏற்காமல் விட்டு விடலாம்.)மனைவிக்கும், மனைவியிடம் கணவனுக்கும் அளவு கடந்த அன்பு காணப்படுகிறதே! அது அவரவரது விருப்பததை ஈடேற்றிக் கொள்வதற்காகவேதான் என்று மேலெழுந்தவாருகத் தோனறும். ஆனுல் இதுஉண்மையில்லை. இறைவனுடைய ஸங்கல்பத்தின் காரண

மாகவே இதெல்லாம் நடக்கிறது'' என்பதே.

இங்கு ஒரு விஷயம் முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டும். முதன் முதலில, கணவன்—மனைவி இவர்களு டைய பரஸ்பர ப்ரீதியின் தத்து வத்தை ஏன் யாஜ்ஞவல்க்யர் விளக்கு கிறார்? அடுத்தாற்போல் மற்றும பல வற்றையும் சொல்லுகிறவர், அவற் றிலே ஏதாவதொன்றுக்கு முதலிடம் கொடுக்கலாமே? ஏன் அபபடிச் செய்யவில்லை? காரணம் ஸபஷ்ட மானதே! இவரும் இவரது மாணவி யும் நேற்றுவரை தம்பதிகளாக அன் யோனயமாக இருநதவர். இன்று துறவிகளாகி ஆசார்ய சிஷ்ய பாவத் தில் இருக்கின்றனர். இவ்வளவு காலம் நன்றாக வேரூன்றிவிட்ட தாம் பத்ய மனோபாவம அறவே மறக்கப் பட வேணும. பிறகுதான் வேதாந் தோபதேசம் மனத்தில ஊன்றி நிற கும. தம்பதிகள் இனறு புதுக் கோலம பூண்டு விட்டாலும் பழைய நினைவுகள மனததை விட்டகலுமா? அப்படி அகறறுவது அசாத்தியமே தான்! ஆனல இப்போது அதைச் சாதிததேயாக வேண்டிய சிக்கலான நிலைமை தோன்றிவிட்டது. யாஜ் ஞவல்க்யா பழுதத பரமமஜ்ஞானி. அதனல் அலக்ஷயமாய் இந்தச சோதனையில் வெற்றி கண்டார். வேறு யாராலும முடியாது. ப்ரபஞ் சததில பலவேறு கோணங்களில காணப்படும் அனபு எமபெருமான திருவுள்ளப்படியே நடக்கிறது. இதற் கெல்லாம மூலகாரணமான இறை வன் அகண்ட பரிபூர்ணமான ஆனந்த மயமானவன். அவனை யறிந்து கொண் டால இந்த நிலையறற அற்பமான இன்பங்களெலலாம் அறவேமறைந்து விடும். இறை உபதேசம் செய்ய வேணடிய நிலையில, ஏற்கனவே ஊனறிவிட்ட தாம்பத்ய மனோ பாவத்தை ஒழிததுக் கடட வேண்டி யது இனறியமையாததாகிவிட்டது. அதனல்தான, கணவன-மனைவி-அன் பின உள் மாமத்தை முதன முதலில் அம்பலபபடுத்தி விட்டார் இவா.

இவ்வாறாக பீஷமருக்கு ஏறபட்ட தைக காட்டிலும் கடுமையான சோதனை யாஜஞவல்க்யருக்கு ஏற் பட்டது. முதிர்ந்த ப்ரமமஜ்ஞானி யான இவர் இதில் பரிபூர்ணமான வெறறி கணடார். மேலும் மைத் ரேயிககும வெறறி பெருமவாயப்பை அருளினா. இருவரும ப்ரமமோ பாஸனம செயது பேரினப வெளளத் தில் ஆழந்தனர்!!!

''மைதரேயீ ப்ராம்மணம்'' எனறு பரஸிதகி பெற்ற இந்த உபநிஷத் தின் பகுதி வெகு கம்பீரமானது. இதில் பொதிந்து கிடக்கும் தத்து வத்தை உள்ளபடி அறிந்தால் ஏனை யோரும் சிற்றின்பப் படுகுழியில் விழாமல பேரினபம் துயக்கலாம. அதனல உலக க்ஷேமததில் உணமை யான ஈடுபாடுள்ள மகானகள பலரும இதறகு பாஷ்ய மிடடருளியிருக கினறனர். அவறறிலதான எத்தனை கருதது வேறுபாடுகள! இதில உப தேசிககப்படுகிற பரமபொருள் போலவே இதுவும எளிதில எட்டிப் பிடிகக முடியாத தொனறாகவே அமைநதுவிடடது போலும்!!

2\. ரைக்வர்

இவரும சிறந்த ப்ரமமஜ்ஞானி. வ்யாஸருடைய பரமம ஸூத்திரங் களையும், அவறறின் பல்வேறு பாஷ் யங்களையும் பயில்வோருக்கு இவர் நன்கு அறிமுகமானவர். ப்ரம்ம

# எழுதாத சந்தம்நீ கண்ணு!

**திரு. அடியார்க்குநல்லான் - திருவாரூர்.**

அஞ்சாறு வயதுகளில் திண்ணைப் பள்ளி
அரிச்சுவடி தோழன்நீ கண்ணு! நாளும்
பிஞ்சான கைக்கோர்த்து ஆற்றுத் தோப்பில்
பிச்சிப்பூ வைத்திடுவாய் வெட்கிப போவேன
நெஞ்சேறும் தாவணியின் இளமைத் தோளில்
நித்தம்நீ நினைவுத்தீ இமையோ வைகை
கொஞ்சாத இரவில்லை கனவுப் பாயில்
கொடிமேனி முறறத்தின் நிலவுத் தீயில்!

முடிமேகச் சடைபின்னித் திலகம கூட்டி
முந்தானை சரிசெய்து வளையல் பூட்டி
மடிமீது கதைசொல்ல வருவாய என்று
மையலூறும் விழிவாசல் கருமைத் தீடடி
படியோரம நடைவைத்துப் பார்ததுப் பார்த்து
பதம்பாடி மணிப்பாதம் வியாததுப போகும்
விடிவானில் வரவெளளி வாராய நீயும்
விரகததின தவமூச்சில் இதயம தேயும!

எழுதாத சநதமநீ கணணு! என்னுள்
இழைகினற ராகங்கள நீயோ? நானோ
பழுதான உடலுககுள் உருகும் பேதை
பரநதாமா! ஆவிபபுண பருகும் கீதை
விழுதான கறபனையின கிளைகள எல்லாம்
விண்ணூசல ஆடுகிறாய் கவிதைக் கண்ணால்
அழுதாலும் அரங்காஎன் கன்னம் நாளும்
அழியாத இளஞ்சூடுக் கோலம் நீதான்!

சாயாச்ரமத்தைப் பூர்த்தி செய்து விட்டார். தொடர்ந்து க்ருஹஸ் தாச்ரமத்தில் இழிய வேண்டிய நிலை ஆனால் அது நடைபெறவில்லை. இவ ருக்கு யாரும் பெண்ணைக் கொடுப் பாரில்லை. காரணம்? இவர் பரம தரித்திரர் நாள் தோறும் பிச்சை யெடுத்துத்தான் உண்பார். மேலும் உடம்பெல்லாம் பயங்கரமான சொறி-சிறங்கு. காண்பதற்கு மிக வும் அருவருப்பான தோற்றம். தாங்க முடியாத தினவு அதைத் தீர்த்துக் கொள்வதற்காகக் கண்ட விடங்களிலெல்லாம் ஆடு மாடுகள் போல் தன் உடலுறுப்புக்களைத் தேய்த்துக் கொண்டேயிருப்பர். இவர் பிச்சைக்குப் போவதற்கு ஒரு சிறு வண்டியை உபயோகிப்பார். நடந்து பல இடங்களுக்கும் செல்லும் சக்தியில்லை. பாவம்! அதனால் सयुग्वा रैक्व· (வண்டிக்கார ரைக்வர்) என்றே 'பெயர்' பெற்றுவிட்டார்.

எம்பெருமானையே அல்லும் பக லும் இடையறாது த்யானம் செய்பவர் இவர். இவருக்கு இத்துணை துன்பங்களைக் கொடுத்து சோதனை செய்தான் இறைவன்! காரணம்? யாருக்குத் தெரியும்? "இந்த உடம் பிலேயே துன்பங்கள் பலவற்றையும் அனுபவித்துவிட்டால் பண்ணின பாவங்களெல்லாம் தொலைந்துபோம். தொடர்ந்து மறுபிறவி யெடுக்காமல் கடிதில் இறைவனை அணுகலாம்" என்னும் எண்ணத்தினால், இவர், புத்தி பூர்வமாகவே இந்த வேதனை களை வரவழைத்துக் கொண்டதாக ஆன்றோர் கூறுவர்.

இப்படி ப்ரமமசாரியுமில்லாமல் க்ருஹஸ்தருமில்லாமல் – இரண்டுங் கெட்டானாகவே அனாச்ரமியாகவே ப்ரம்மோபாஸனம் பண்ணிக் கொண் டிருந்த இவருக்கு ஒரு நன்னாளில், "யோகம்" அடித்தது. இவரிடம் ப்ரம்மஜ்ஞானத்தைப் பெற விரும் பினான் ஜாநச்ருதி என்னும் அரசன். தனது அருமை மகளை இவருக்குக் கொடுத் துத் திருமணம் செய்து வைத்துவிட் டான். இவர் க்ருஹஸ்தராகி விட் டார்!!

பிறகு நடந்ததென்ன? அதுதான் தெரியவில்லை. ப்ரம்மஜ்ஞானத்தில் பழுத்த பழமான இவர், தனது ஸஹ தர்மசாரிணிக்கும் அதையே உப தேசித்து, ப்ரம்மோபாஸன தம்பதி களாக, "ஜோடி"யாகவே மோக்ஷத் தைப் பெற்றிருக்க வேணும். 'உத்தர ராம சரிதம்' போல், 'உத்தர ரைக்வ சரிதம்'' நூல்களில் கூறப்படவில்லை. ஆனாலும் 'பூர்வ சரித்ரத்தி'லிருந்து நாம் பிற்பகுதியையும் ஊகித்தறிவது பொருத்தமே.

3. வாசக்நவீ: (वाचक्नवी)

சிறந்த ப்ரம்மஜ்ஞானம் படைத்த ஒரு பெண்மணி இவள். இவளுக்கு, 'கார்கி' (गार्गी) என்றும் மற்றொரு பெயருண்டு. இது கோத்ர நாமதே யம். முந்தியது இவளது தந்தையின் பெயரை ஆதாரமாகக் கொண்டது. वचक्नु: என்பவர் ஒரு ரிஷி. அவரு டைய மகள் இவள். அதனால் वाचक्नवी என்று வழங்கலாயிற்று. தசரதரு டைய பிள்ளையை "தாசரதி" என் பது போல்.

இந்த வாசக்நவீ மணம் செய்து கொள்ளவே இல்லை. அதனால் யாருக் கும் மனைவியாகவில்லை. பிறந்ததுவே முதலாக ப்ரம்மஜ்ஞானம் இவளுக்கு ஏற்பட்டுவிட்டது நம்மாழ்வாருக்குப் போல. அதனால் ப்ரபஞ்சத்தின் போக்குக்கு மாறாக பகவத் த்யானத் திலேயே ஊன்றியிருந்து விட்டாள். எங்கேயாவது வேதாந்த விசாரம் நடந்தால் அதில் கலந்து கொள் வாள். உபநிஷத்தில் இவளுடைய ப்ரம்மஜ்ஞானம் பெரிதும் புகழப்படு கிறது. ப்ரம்மாண்டமான மகரிஷி களின் கோஷ்டியில், தனிப் பெருமை யுடன் திகழ்ந்த யாஜ்ஞவல்க்ய முனி வரை, இவள் பற்பல கேள்விகளையும் கேட்டுப் பரீக்ஷித்து, "அறிவிற் சிறந் தவர்" என்று அவருக்குச் சான்றிதழ் வழங்கினாள். குழுமியிருந்த அனை வரும் — ஏன்? யாஜ்ஞவல்கிய ரியருங்கூட — அதை உவகை யுடன் ஏற்றுக் கொண்டனர். அத்துணை பெருமை வாய்ந்த வள் இவள். ஆண்களில் ஹனுமான் போல், பெண்களில் இவள் திருமண மென்னும் ஒரு நிகழ்ச்சியைக் கன வில் கூட நினைக்காமல் நீர்க்க ப்ரம்ம சாரிணியாகவே ஆயுள் காலம் முழு தும் இருந்துவிட்டாள். அதனால் இவளுக்கு க்ருஹஸ்தாச்ரமம் ஏற் படவே இல்லை. ப்ரம்மசர்யாச்ரமம் என்பது ஸ்த்ரீகளுக்கு ஏற்படுத்தப் பட்டிருக்கவில்லை. அதனால் 'அனாச் ரமி' யாகவே இவள் கருதப்பட் டாள். சங்கர பகவத் பாத பாஷ்யத் தில், 'अन्तरा चापि तु तद्दृष्टेः' (ப்ரம்ம ஸூத்ரம் 3-4-36) என்னும் ஸூத்ர வ்யாக்யானத்தில், 'रैक्ववाचक्नवी प्रभृतीनां ब्रह्म वित्त्वश्रुत्युपलब्धेः' என்று பெரு மைப்படக் கூடிய வகையில் இவளது ப்ரம்மஜ்ஞானம் புகழ்ந்துரைக்கப் பெற்றுள்ளது. பீஷ்மருடைய கோஷ் டியில் இவளுக்கும் ஓர் இடமுண்டு.

4. ஸம்வர்த்தர் (संवर्तः)

இவரும் ப்ரஸித்தி பெற்ற ப்ரம் மஜ்ஞானி. ப்ரம்மஸூத்ர சங்கர பாஷ்யத்திலும் ஸ்ரீ பாஷ்யத்திலும் உதாஹரிக்கப்பட்டுள்ளார். ஸாக்ஷாத் தேவ குருவான ப்ருஹஸ்பதியும் இவரும் உடன் பிறந்தவர்கள். ஸம் வர்த்தர் இளையவர். ப்ருஹஸ்பதி மூத்தவர். சகோதரர்களிருவரும் உலக ப்ரஸித்தி பெற்றவர்கள். இரு வரும் தனித்தனியே தர்ம சாஸ்திர மும் உலக க்ஷேமார்த்தமாக எழுதி வைத்திருக்கின்றனர்.

मन्वत्रि विष्णुहारीत याज्ञवल्क्योशनोऽङ्गिराः।
यमापस्तंबसंवर्ताः कात्यायन बृहस्पती ॥
पराशरव्यासशङ्खलिखिता दक्षगौतमौ ।
शातातपो वसिष्ठश्च धर्मशास्त्रप्रवर्तकाः ॥

(யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதி)

என்னும் இரண்டு ச்லோகங்களில் யாஜ்ஞவல்க்யர் தர்ம சாஸ்திரம் எழுதின மகரிஷிகளின் திருநாமங் களைக் குறிப்பிடுகிறார். இருபது பேர்கள் இதிலுள்ளவர்கள். அவர் களுள் பத்தாவது ஸம்வர்த்தர். பன் னிரண்டாவது ப்ருஹஸ்பதி.

(தொடரும்)

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

**தினசரி பூசைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை**

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை
(அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ100/- டிக்கெட் வாங்கிய நபர்கள மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,
(அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

5-30 முதல 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் மதியம 12-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, (ஏகாந்தம்) 2வது மணி.

1-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

1-00 முதல் 7-00 வரை: கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள் ஊஞ்சல்சேவை முதலியன

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், இரவு மணி

8-00 முதல் 10-00 (இரவு) **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக் கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்த சேவை (ரூ 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**புதன் கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை
(அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும ரூ 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமேஅனுமதிக்கப்படுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபி ஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை 2வது மணி.

8-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்.**

மதியம் : 1-00 முதல் மாலை 7-00 வரை: ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள் வாகன சேவைகள், ஊஞசல சேவைகள் முதலியன,

இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன

8-00 முதல் இரவு 10-00 வரை **ஸர்வதரிசனம்.**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்.

10-30 இரவு ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிககப்படுவர்)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை. நடைபெறுவதால)**

காலை : 3-00 முதல 3-30 வரை : சுப்ரபாதம
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 4-30 வரை : நிதய கட்டளை கைங் கர்யங்கள் அதாவது சுத்தி, தோமால, அர்ச்சனை முதல்மணி மற்றும அபிஷேகததிறகானஏற்பாடுகள்.

4-30 முதல் 6-00 வரை : அபிஷேகம்

6-00 முதல் 7-30 வரை . மூலவருக்கு சமர்ப்பணை

7-30 முதல 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை 2-வதுமணி, பலி,சாததுமுறை முதலியன

9-00 முதல் இரவு 6-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் 1-00 முதல் மாலை 7-00 வரை : ஆர்ஜித கல்யாணோற்சவம், பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் மற்றும் மற்றைய ஆர்ஜித சேவைகள

இரவு 7 -00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மற்றும் இரவு மணி

8-00 முதல் நடுஇரவு10-00 வரை : **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக் கான ஏறபாடுகள்.

10-30 இரவு : ஏகாநதசேவை (ரூ 50/- டிககெட் வாங்கிய நபாகள மட்டுமே அனுமதிககப்படுவர்)

**வெள்ளிக் கிழமைகளில (அபிஷேகம நடைபெறுவதால)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, கைங் கர்யங்கள், காலை மணி, அபிஷேகத்திறகான ஏற்பாடுகள்

5-00 முதல் 6-30 வரை : அபிஷேகம்

6-30 முதல் 8-00 வரை : சமாப்பணை

8-00 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை (தனி)

9-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுததி, இரவு கைங்கர்யங்கள், மணி, முதலியன.

8-00 முதல இரவு 10-00 வரை **ஸர்வதரிசனம்**

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,

10-30 ஏகாந்தசேவை (ஆர்ஜிதம் ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிககப்படுவர்.)

தொடர் நூல்:

# ★ திருவேங்கடமலை வரலாற்று மாலை ★

**அடிப்புளியின்கீழ் இராமாயண காலக்ஷேபமும் ஸ்வயம் வ்யக்தமான திருவடிகளும்:**

இனி, திருமலையேறும் படிக்கட்டு வழி தொடங்குமிடத்திலுள்ள புளிய மரத்தின்கீழ இருக்கும் திருவேங்கடமுடையானுடைய திவ்யமான திருவடித் தாமரையிணையைப் பற்றிய சரிதம் கூறப்படும்; ஆளவந்தாருடைய நியமனம் பெற்றுத் திருமலை நம்பி என்னும் ஆசாரியர் திருவேங்கடமலையில் வசித்துக்கொண்டு முச்சந்திகளிலும் திருவேங்கடமுடையானைச் சேவித்தும் நாள்தோறும் பெருமாள் திருமஞ்சனத்திற்கு உதவும்படி ஆகாச கங்கையிலிருந்து தீர்த்தம் கொணர்ந்து ஸமர்ப்பித்தும் பெருமாளுக்கு ஐச்வர்யம் அளவற்று மேன்மேலும் தழைத்தோங்குமாறு எப்போதும் மங்களா சாஸனம் செய்வதிலேயே ஊற்றமுடையவராய் இருக்குமளவில், ஆளவந்தார் பரமபதம் எழுந்தருளும்போது பெரிய நம்பி திருமலை நம்பி திருக்கோட்டியூர்நம்பி திருமாலையாண்டான முதலியோரிடம், "ராமானுஜருக்காக என்னால் நிதியைப் போல் மறைத்துக் காக்கத்தக்க ஒவ்வொரு விசேஷார்த்தங்கள் உங்களிடம் உபதேச மூலமாக வைக்கப்பட்டுள்ளன. அவை தக்க தருணத்தில் ராமானுஜரால அடைய (அறிய)ப்பட வேண்டும். அவர் நான் வாழ்ந்திருக்கும் நாட்களிலேயே இங்கு வந்திருப்பராகில் இவற்றை அவர் என்னிடமிருந்தே அறிந்திருப்பர். எனக்குப் பாக்கியமில்லாமையால் என் வாழ்நாளில் அவர் என்னிடம் வரவில்லை; அவர் வெகு சீக்கிர காலத்திலேயே விஷ்ணுவின் மதத்தை அறியப் போகின்றார். அதனைப் பிற சமய வாதிகள் யாரும் அசைக்க முடியாதபடி ஸ்தாபிக்கவும் போகிறார். அதுபோது காலம் பார்த்து, நான் உங்களிடம் வைத்துள்ள நூற்பொருள்களை அவசியம் அவரிடம் நீங்கள் சேர்த்து விடுங்கள்" என்று கட்டளையிட்ட நூற்பொருள்களில், திருமலை நம்பியிடம் ஸ்ரீராமாயண விசேஷார்த்தத்தைக் கேட்டறிவதற்காக வந்த ராமானுஜ முனிவருக்குத் திருமலைநம்பி தம் ஆசாரியரான ஆளவந்தாருடைய கட்டளையை நினைவுபடுத்திக் கொண்டு பேரன்புடன் ராமாயணத்தின் சிறந்த (உட்) பொருள்களை உபதேசித்தார். அப்படி உபதேசிக்கும்போது ராமானுஜர் அபசாரம் நேருமென்றஞ்சித் திருமலையில் தாம் வசிப்பதைப் பொறுமலிருக்க, திருமலை நம்பி தாமும் ஆசார்யர் நியமித்ததாய்த் திருவேங்கடமுடையானுக்குத் தினந்தோறும் திருமஞ்சன தீர்த்தம் கொணர்ந்து ஸமர்ப்பிக்கும் கைங்கரியத்தையும் தினமும் ஸ்ரீநிவாஸனைத் தொழுது மங்களா சாஸனம் செய்வதையும் விட்டு (கீழ்த்திருப்பதியில்) இருக்க முடியாதவராய், வாரீர் இராமானுச முனிவரே, தினந்தோறும் இராமாயண பாடம் காரணமாக நீரும் நாமும் கூடுமிடம் திருமலையேறும் படிகள் வழியின் தொடக்கத்திலுள்ள புளியமரத்தின் கீழிருக்கும் குண்டுக்கல்லின் கீழ்ப்பகுதியே ஆகத் தக்கது. நான் திருமலையில் காலைத் திருவாராதனம் முடிந்தவுடன் பெருமாள் பிரசாதத்தையும் எடுத்துக் கொண்டு அவ்விடத்திற்கு வருகிறேன், உமக்கும் கொடுக்கிறேன். நீரும் கீழ்த் திருப்பதியிலிருந்து காலைக் கடன்களை நிறைவேற்றிக் கொண்டு வாரும். பின்பு அவ்விடத்தில் ஸ்ரீ ராமாயண பாடம் நடக்கும். பெருமாள் திருவாராதனத்தையும் போஜனத்தையும் அவ்விடத்திலேயே செய்து கொள்ளுகிறேன். உமக்கும் பகலனுஷ்டானம் அனைத்தும் நிறைவேறிய பின்பு மறுபடியும் பாடம் நடைபெறும். பிறகு பெருமாளுடைய மாலைத் திருவாராதனத்திற்காக நான் திருமலைக்கே சென்று விடுகிறேன், நீரும் திருப்பதிக்குச் செல்லலாம் என்று நியதியை ஏற்படுத்தி அப்படியே ஓராண்டுக் காலம் ஆளவந்தாருபதேசித்த ஸ்ரீராமாயண விசேஷார்த்தங்களை உள்ளபடியே உடையவருக்குக் கற்பித்தருளினார்.

திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி—வித்வான், திருப்பதி.

இவ்வாறு கற்பிக்கும் திருமலை நம்பி ஒருகால் திருவேங்கடமுடையானை மாலைத் திருவாராதன காலத்தில் சேவித்துத் திருமாளிகை சேர்ந்து இரவு சயனித்தருளும்போது பெருமானைத் தியானித்து, 'திருவேங்கடத்தரசனான ஸ்ரீநிவாஸ பகவானே ஆளவந்தாருடைய கடாக்ஷத்தினால் இதுவரையிலும் முச்சந்திகளிலும் நீர் எனக்கு ஸேவை தந்துகொண்டிருந்தீர்; இப்போது ஸ்ரீராமாயண

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

பாடம் காரணமாகப் பகற்காலத் திருவாராதன ஸேவை துர்லபமாகி விட்டது' என்று நினைத்துக் கொண்டே கண வளர்ந்தருளினார்; பின்பு உறங்கும் திருமலை நம்பிக்கு இரவில் கனவில, 'வாரீர் திருமலை நம்பியே உமக்குப் பகல் திருவாராதன ஸேவையையும் தந்தோம், வருததப்படாதீர்' என்று ஸ்ரீநிவாஸன் எதிரே நின்று சொல்ல, காலையில் துயிலுணர்ந்த அவர் வழக்கப் படியே ஆகாச கங்கையிலிருந்து திருமஞ்சன தீர்த்தம் கொண்டு வந்து ஸமர்ப்பித்துப் பெருமாளுடைய காலைத் திருவாராதன ஸேவையையும் பெற்றுப் பினபு ஸ்ரீராமாயண பாடத்திற்காகத் திருமலை யடிவாரத்தில் புளிய மரத்தடியிலுள்ள குண்டுக் கல்லின் அருகில் வந்து அங்குத் தம்மை எதிர் பார்ததிருககும் இராமாநுச முனிவருக்கு இராமாயணம் கறபித்துக் கொண்டிருந்தார். அதன்பின்பு பகற்பொழுதில் கஸ்தூரி குங்குமப்பூ பச்சைக கருப்பூரம் ஆகியவற்றின் நறுமணத்தினால் குங்குமமென்று பதது திசைகளையும் கமழச் செய்துகொண்டு சந்தனம் புஷ்பம திருத்துழாய் இவற்றால் அலஙகரிக்கப்பட்ட திருவேங்கடமுடையானுடைய திவ்விய பாதங்கள அங்குளள குண்டுக் கலலின்மீது தோற்றமளித்தன.

பின்பு திருமலை நம்பியும் ஸ்ரீராமாநுஜ முனிவரும் நாற்புறங்களிலும் பரந்த அத்திவ்விய நறுமணத்தை மோந்து இது எனன பரிமளமென்று ஆராய்ந்தறிவதற்காக உடனே எழுந்திருந்து எல்லாப் பக்கங்களிலும் கண் செலுத்திப் பிறகு அங்குக் குண்டுக் கல்லின்மேல் முற்கூறிய தோற்றமுடைய திருவேங்கடநாதனுடைய திவ்விய திருவடிகளைக் கணடு வியப் படைநதனர். இங்ஙனம் தோனறிய பெருமானின அழகிய திருவடிகளைக கண்ட திருமலை நம்பி தமது கனவுச செய்தியையும் இராமாநுச முனிவர்க்கு அறிவித்து அவருடன கூடி மனம் மிக மகிழ்நதிருந்தார்.

அதனபின அவ்விருவரும் ஆச்சரிய மடைந்து ஸ்வயம் வ்யக்தமான (தாமே தோன்றிய) அத்திவவிய திருவடியிணையை ஸேவித்து, அதன்கீழ் அக்குண்டுககலலிலேயே அத்திருவடிகளோடு ஒரே திருமேனியாக ஆழ்வார்களை அவதரிக்கச் செய்து (பிம்பமாக வடித்து) ஒரு கோவிலையும் கட்டுவித்து (அத்திருவடிகளுக்கும் ஆழ்வார்களுக்கும்) ஸ்ரீவைகாநஸாகமம் கூறிய விதிப்படியே பிரதிஷ்டை பூஜை முதலானவற்றையும் நிறைவேற்றித் தீர்த்தப் பிரசாதங்களையும பெற்றுக் கொணடு, திருமலை மேலுள்ள முற்கூறிய உறங்காப புளிய மரம் போல் தோற்றமளிக்கும் இப்புளிய மரத்தையும் பெருமாள் திருவடிகள் தோன்றுவதறகு முன்னமே பிடித்து அதறகாகவே அஙகு வந்து சேர்ந்த ஆதிசேஷனாகவே கருதி அத்திருவடிகளின் அருகிலேயே இராமாயண கால க்ஷேபம நடத்தி வந்து சில நாட்களிலே சாத்துமுறையையும் செயது முடிததனா.

அதற்குப் பிறகு பரமதயாளுவான பகவத் ராமாநுஜ முனிவர், 'கலியுகததில் திருவேஙகட நாயகன விசேஷமாகச் சகதியுடையவன' என்று பிரசிததமான பெருமையுடையவனும், 'மிகக கொடிய கலியுகததில் பிறரைப் பிடிததுப பாபமே உருவெடுத்து வநத மனிதாகளுககும உய்வு பெறததகக இடம பூகோளமத்தியில் புணணியமான தமிழ்நாட்டிலுள்ள திருவேங்கடமலையொன்றே, வேறேதுமனறு' எனறு ஸ்ரீ பவிஷ்யோததர புராணததைச் சேர்ந்த 80 எண் குறித்த ஸ்ரீவேங்கடேச ரஹ

## கருட தரிசனம்

அருக்கனிலறியா தியறறிடுந்திங்குக
எனைத்துமேவிலகு மரும்பிறைதன்னில்
திருக்குராபுந்தியும் குருவுமேவெற்றி
பிரபலமாம் வெள்ளியுமுடவன்
தரித்திடுமாயுள் பூரணனென்னத்
தவத்தவராலுரைத்த தரிசனமாகும்
கருடனை நிதமும் கணடாரடையும்
காட்சியின்மிக்கக் காட்சியிலையால்.

| நாள் | தரிசனம் | பலா பலன |
|---|---|---|
| ஞாயிறு | ,, | தான் அறிந்தும அறியாமலும செய்த பாவத்தினால் அணுகிய பிணி முதலியன நீங்கும். |
| திங்களும்-செவ்வாயும் | ,, | மன வியாகூலம் நீங்கி நன்மை உண்டு. |
| புதனும்-வியாழனும் | ,, | தன்மீதுற்ற பகைவரின வல்லமை செல்லா; தனககே வெற்றியுண்டாம். |
| வெள்ளியும்-சனியும் | ,, | ஆயுள் வளரும்; குடும்ப சந்தானம உண்டாகும். |

இவ்வாறு தரிசித்தல் ஒரு நாளைக்கேயினறி, பன்னாளும செய்து வருவோருக்குச் சாலோக சாமீப சாரூப சாயுச்சிய மென்னும் நானகு பதவிகளிலும் தம்தம்மாலிழைத்தப் பலனுக்கியையப் பெறுதலுமன்றி இகத்திலுள்ளளவும் நோயற்ற வாழ்வும், குறைவற்ற செல்வமுமுள்ள சம்பன்னராய் நீடித்த ஆயுளுடையராய் நாடியோருக்குக் கூடிய பரோபகாரி யாவரென முன்னோர்களால் கூறப்பட்டிருக்கின்றன.

திருமதி. என். குமுதம்—இண்டூர்.

ஸ்யாத்தியாயத்தில் கூறியபடி மிக வும் பிரசித்த வைபவமுடைய திரு வேங்கடமலையின் சிகரத்தில் எழுந் தருளியிருப்பவனும், 'பாபததில் விருப்பமுளளவாகளால் அடகக யாளப்படும் கலியுகத்தில் எல்லாரை யுமவிட உயர்ந்த திருமால் பக்தர் களிடம் தான் வைத்துள்ள பேரன்பு காரணமாக அனைவரையும் காப் பாற்றுவதற்குத் திருவேங்கடமலை யரசனென்னும் பெயர் பெற்ற அர்ச் சாமூர்த்தியாக அவதரித்தான' என் பது முதலான வசனங்களில் கூறிய படி சாதி நிலைகளின் வேறுபாடினறி மனிதரெல்லாரையும் காப்பதற்காக அவதாரம் செய்தவனுமான திருவேங் கடநாதனை வணங்கித் தம் வாழ்வைப் பயன் பெறுமாறு செய்து கொளளுந் தகுதி அனைவருக்கும் பொதுவாக உள்ளதனால், ஐநதாம் வருணத்தில் பிறந்துளள திருமாலடியார்க்கும் மற்றுமுள்ள தாழ்ந்த சாதியினர்க் கும் திருவேங்கடமலையேறும் உரிமை யில்லாமையினால் அவர்கள் அனை வரும் திருவேங்கடமலையின் தெற்குக் கொடுமுடியிலுள்ள பள்ளத்தாக்கு களிலிருந்து பாயுமவையும் அந்தணர் முதலான ஐவகைச் சாதியினரைச் சேர்நதவையுமான மிகப் பிரசித்த மான ஐந்து தீர்ததங்களில் கடைசி யான சணடாள தீர்த்தத்தில் (மால வாரி குண்ட) நீராடித் தூயவுடை யுடுத்துக் கொண்டு திருவேங்கட முடையானுடைய இந்த ஸ்வயம் வ்யக்தமான (தாமே தோன்றிய) திவய திருவடியிணையை அணுகிக் கண்டு வலம்வருதல் வணங்குதல் முதலியவற்றால் வழிபட்டுப் பாக்கிய சாலிகளாய் உய்வார்களாக என்று வரையறை செய்தருளினார்.

**கோவிந்த நாமோச்சாரணத்துடன் திருவேங்கடமலை யேறுதல்:**

மேலும் அவ்விராமானுசமுனிவர், வராக புராணம் முதற்பகுதி 62 எண் ணிட்ட முப்பதாமத்தியாயத்தில்– மகர்ஷிகள் கூட்டங்கூட்டமாகக்கூடி, கோவிந்தா கோவிந்தா என்று ஓயா மல் உரக்கக் கோஷம் செய்து கொண்டு சென்றார்கள் என்று, முன்பு திருவேங்கடமலையின் மகிமையைச் சூதமஹாமுனிவர் சொல்லக் கேட்டு அம்மலைக்கு யாத்திரையாகப் புறப் பட்ட மகரிஷிகள் திருமாலின் மற்ற பெயர்களை விட்டு 'எப்போதும் கோவிந்தா என்று சொல்லவேணடும்' என்று விதிக்கப்பட்ட கோவிந்த நாமத்தையே உயர்ந்த குரலொலி யுடன் கோஷித்துக் கொண்டு திரு வேங்கடமலை யாத்திரை செய்த தாகக் காணகையால், இப்போது திருமலையேறுமவர்கள், திருவேங்கட மலை வேறு தேவதைக்கு உரியதென்று நடுவிலுண்டான வாதத்தை முறி யடிப்பதற்காக, அந்நாளில் போல் கோவிந்த நாமத்தையே ஓயாமல் உரத்த குரலில் கோஷித்துக் கொண்டும், அதன் மூலமாகத் திரு வேங்கடமலை விஷ்ணு க்ஷேத்திரமே என்பதைப் பண்டிதர் பாமரர் என்ற வேறுபாடில்லாமல் அனைவருக்கும் அறிவித்துக்கொண்டும், வெகு தூரத் திலிருந்து பகவானைத் தரிசிக்க விரும்பி வருமவர்களுக்குத் தரிசன மளிப்பதற்காகப் பரம கருணையினால் திருமலையடி வாரத்திலேயே தோன் றிய இத்திருவடியிணையைச் சேவித்து விட்டுப் பிறகே திருவேங்கடவனைச் சேவிக்கத் திருமலையேறக் கடவர்கள் என்ற நியமத்தையும் ஏற்படுத்தினார்.

(தொடரும்)

---

16-ம பக்கத் தொடர்ச்சி)

நினைத்து அககுடத்தினைத் திறந்து பார்ததான. அக்குடத்தில் உள்ளே இருப்பவை செந்தாமரை புஷ்பங் களாக தெரிய வரவே முன்போலவே அந்த அஸ்திக்குடத்தினைத் திரும்ப மூடி வைத்தான். பினபு குருவான வர் காசியில் திறநது பார்த்தபோது அதனுள வெறும எலும்புகள இருக்கக்கண்டு கும்பகோணத் தில் பூக்களாக இருந்தவை காசி யில் எலும்புகளாக உள ளனவே எனறு சிடன வியந துரைத்தான். மீண்டும கும்பகோணத் திற்கே வந்து சக்ரபடித்துறையில் குடத்தைத் திறக்க அவை முன் போலவே புஷ்பங்களாக இருக்கக் கண்டுசக்ரபடித்துறையிலேயே அஸ்தி யைக் கரைத்தார். இப்புனிதம் தீர்த்த மகிமை இத்திருத்தலத்தில் விசேஷமாக எடுத்துரைக்கப்படு கிறது.

துலா மாத பிறப்பன்று இந்தத் தீர்த்ததில் நீராடுவதும், இத் தீர்த்தக்கரையில் தானங்கள் செய் வதும், காரியங்கள் (ஈமக்கிரியை) செய்வதும் மிகவும் விசேஷமாகப் பேசப்படுகின்றன

பொன்னி நதியின் தென்கரையில் அமைநதுளள சக்ரபாணி ஆலயத்தில் ஸ்ரீ பாஞ்சராத்ர ஆகம முறைப்படி பூஜைகள நடைபெற்று வருகினறன. இவ்வாலயத்தில் மாதாந்திர மக நட் சத்திர புறப்பாடும், சிததிரையில் அட்சய திருதியைக் கருடோத்ஸவ மும், ரதசப்தமி, திருக்கல்யாண உற் சவஙகளும், ஆவணியில் பவித்ரோத் ஸமும், மாசிமக பிரம்மோத்ஸவமும், பிரதி வருடம் ஸ்ரீ ஸுதர்ஸன ஜெயந்தியும்,வருடாந்திர ஜேஷ்டாபி ஷேகம் மற்றும் பக்தர்கள் சேர்ந்து நடத்தும் ஸுதர்ஸன ஹோமமும், திருமஞ்சனமும் விசேஷமாகக் கொண்டாடப்படுகின்றன.

மேலும் இத்திருக்கோவிலுக்கான பெருமையைப் பற்றிக்கூறும் பொழுது பல ஊர் திருமால் ஆலயங் களில் ஸ்ரீ சக்ரபாணிககுத தனி சன் னதி இருககும். ஆனால் இத்திருத் தலத்தில் ஸ்ரீ சக்ரபாணிக்குத் தனிக் கோவிலே உளளது. இவ்வாலயத்தினை ஆலய அறங்காவலரும, நிர்வாக அதி காரியும் மிகவும் சிருடனும் சிறப்புட னும் புதுப்பித்து ஆலயத்தினைப் பேணி பாதுகாத்து வருகின்றனர். ஒவ்வொரு பக்தரும் தனித்தனியாக வும் இவவாலயத்திற்குத் திருப்பணி செய்து வருகின்றனர்.

✱

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

**பிரம்ம புராணம் பெருமை என்ன?**

இதில் பூர்வபாகம் உத்தரபாகம் என இரு பகுதிகள் உள்ளன. ஆசிரியர் வியாசார்யர். தேவர்கள் - அசுரர்கள் - பிரமன் - சூரியன் - ராமன் - சந்திர வமிசம் - கண்ணபிரான் - தீவுகள் - நாடுகள் - கண்டங்கள் - நரகயாதனைகள் - இராவணன் பற்றிய விவரம் - சூரியனுடைய கதிகள் - பார்வதியின் பிறப்பு, திருமணம் முதலியன முதல் பகுதியில் கூறப்பட்டுள்ளன. உத்தரபாகம் என்ற இரண்டாம் பதியில், யமலோகம் - சிராத்த முறை - பித்ருலோகம் விஷ்ணுதர்மம் - ப்ரளயம் - யோக வித்தை - புராணப்பெருமை - புராணங்களைப் படிப்பது, கேட்பது முதலியவற்றுக்கு உள்ள பெருமை போன்றன விளக்கப்பட்டுள்ளன.

**பத்மபுராணம் சிறப்பு என்ன?**

இதில் 5 கண்டங்கள் உள்ளன. சிருஷ்டி கண்டம், பூமி கண்டம், சுவர்க்க கண்டம், பாதாள கண்டம், உத்தர கண்டம் என்பன ஐந்தாகும். இதில் புலஸ்த்தியர் என்பவர் பீஷ்மருக்கு படைப்புகள் பற்றிய விவரம் தருகிறார். புஷ்கரத்தின் பெருமை - தான தர்மத்தின் சிறப்பு - பார்வதி கல்யாணம் - தாரகாசுரவதம் - பாஞ்சராத்திரம் பூஜை முறைகள் - கோயில், விக்கிரங்கள் விளக்கம் - அசோக சுந்தர் பற்றிய கதை - 7 மகாநதிகளின் பெருமை - ராமன் - கதை சிவ மகாத்மியம் - சிவகீதை - 24 ஏகாதசிகளின் பெருமை - திருவஷ்டாக்ஷரம் என்ற நாராயண மந்திரத்தின் பெருமை - துவயம் என்ற மந்திர ரத்தினத்தின் மகிமை - ராமநாமத்தின் சிறப்பு - இந்தப் புராணத்தைப் படிப்பதால், கேட்பதால் ஏற்படும் அருள் விலாசம். முதலியன கூறப்பட்டுள்ளன. இதில் பல நுணுக்கமான ஆராய்ச்சிக்குரிய பல கருத்துக்கள் மண்டி இருக்கின்றன.

**விஷ்ணு புராணம் மகிமை என்ன?**

இதற்குப் புராணரத்தினம் என ஸ்ரீ வைஷ்ணவ பரமாசர்யரான ஸ்ரீ ஆளவந்தார் பெயரிட்டார். இது ஸ்ரீவைஷ்ணவ சமயத்திற்குப் பாங்கான புராணமாகும். இதனை வியாசரின் தந்தையான பராசர மகரிஷி வெளியிட்டார் என்று "பராசரம் முனிவரம் கிருத பௌர்வாஹ்னிக கர்மம்" என்ற இப்புராணத்தின் முதல் செய்யுள் குறிக்கும். இதிலும் முதல் பகுதி இரண்டாம் பகுதி என இரண்டு பிரிவுகள் உண்டு. ஒவ்வொன்றுக்கும் 'அம்சம்' எனப்பெயர். 6 அம்சங்கள் இப்புடையில் உண்டு. இதில் மௌர்ய வம்சம் வருணிக்கப்படும். தம் பழைய பாரததேசத்தின் உண்மையான அளவற்ற பெருமையைப் பேசி தேவர்களும் இந்த நாட்டில் தங்க விரும்புகிறார்கள் எனவும் பேசப்பட்டுளளது. உலகபபடைப்பு - தேவர்கள், அசுரர்களின் பிறப்பு - பாற்கடல் கடைந்தது - துருவ சரித்தரம் - பிரகலாத சரித்திரம் - ப்ராசேதஸ் சரித்திரம் - ஏழு தீவுகளின் வருணனைகள் - பாதாள வருணனை - பரதவமிசம் - வேதவியாஸரின் அவதாரம் மாயாமோகன் கதை - கிருஷ்ணவதாரக்கதை. [இந்தக் கதைதான் இப்புராணத்தின் ஜீவநாடி அதனால் இப்புராணத்தில் ஸ்ரீ வைஷ்ணவ ஆசார்யர்களுக்கு மிகவும் உகப்பு. திருவாய் மொழி முதலிய பிரபந்த உரைகளில் இப்புராணத்திலிருந்தே மேற்கோள்கள் அதிகம் வரும்.] நிருசிம்மாவதார வைபவம் - கஜேந்திர மோக்ஷ வைபவம் — அஷ்டாவக்கிரமகிரிஷியின் கதை - தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற சதுர்வித புருஷார்த்தங்களின் சீரும் சிறப்பும் கூறப்பட்டுள்ளன. எல்லா சாஸ்திரங்களின் வழியும் உண்மையும் இதில் விளக்கப்பட்டுள்ளன எனவும் கூறுவார்கள்.

**வாயு புராணம் விளக்கம் என்ன?**

இதிலும் முனபகுதி பின்பகுதி என இரண்டு பகுதிகள் உண்டு. இதைப் பக்திச் சிரத்தையுடன் பாராயணம் செய்து கேட்பவர்கள் சிவப்ரீதிக்கு இலக்காகி ருத்ரயோகம் அடைவார்கள் என உரைககப்பட்டுள்ளது. இதில் செய்யுள் நடையும் கருத்தும் எளிமை கொண்டது எனவும் சிலர் கூறுவார்கள். இதில் குப்த வமிச விவரணம் உள்ளது. கயாஸுரனவதம - மாதங்களின் பெருமை - மாகமாதம் [ஐபபசி] பற்றிய சிறப்பு - விரதஙகள் - ராஜதர்மம - தானதர்மம் - நர்மதை நதியின் சிறப்பு - சிவசம்ஹிதை - ரேவாநதியின வருணனை - சிவனுடைய பரத்வம் மற்றும் இநதப் புராணத்தை தினப்படி ஒரு பகுதியாவது பாராயணம் செயதால் சிவபெருமான் அருளுககு இலககாகி ருதரயோகம அடையும் பெருமை என்பனவும் கூறப்பட்டுள்ளன.

(தொடரும்)

சிறுவர் பகுதி :

# தயிர்க்காரன்

நந்த கோகுலத்தில வழக்கம் போல் தயிர், பாலைத் திருடி விட்டு ஓடும் கண்ணனை எப்படியும் இன்று பிடித்து யசோதையிடம கொண்டு போக முடிவு பண்ணிக் கண்ணனைத் துரத்தியபடி வருகிறார்கள் கோகுலவாசிகளான ஆயர் பெண்கள். எல்லோரா கைகளிலும் கொம்பும், தாம்புக் கயிறும் இருக்கிறது. பயந்த சிறுவன் கண்ணன், வேறு வழியில்லாமல் அங்குளள சமீபத்திய காட்டில் சென்று மறைகிறான். அங்கிருந்து திரும்பிப் பார்தத கண்ணன் மிக நடுங்குகிறான். காரணம் எல்லோரும் அவனைத் துரத்தியபடியே காட்டிற்கே வந்து கொண்டிருந்தார்கள். அவர்களின கோபமோ எல்லை கடந்துவிட்டது. முழிக்கிறான் வெண்ணைத் திருடன். உடனே ஓர் உபாயம் தோனறுகிறது.

அங்கு ஓர் ஆலமரத்தடியில் கிழவனார் ஒருவா பெரியதொரு பானையுடன் இருக்கக்கண்டான். அவசரமாக அவரிடத்தில் சென்று 'தாத்தா என்னைக் காப்பாற்றுங்கள். என்னை ஆபத்து நெருங்கிக கொண்டிருக்கிறது. வேறு வழி தெரியவில்லை. நீங்களே துணை' என்று மாயக்கள்ளன் அழுகிறான்; பெரியவர் நன்கு விஷயத்தைக் கண்டு கொண்டார். பின்னால் திருடி வநதவனை துரத்திய படியே ஓர் கூட்டம் (ஆயர்குல பெண்கள்)வருவதையும கண்டாா. உடனே அந்தப் பெரியவர் நம குழநதை கண்ணனைத் தான் வைத்திருநத பெரியதொரு தயிாப் பானையில் புகவைதது மூடி மறைத்துவிட்டார். ஊர் மககளும் அங்கு வந்துவிட்டார்கள்.

'ஏ, தாத்தா, இங்கு ஓர் திருடன் வந்தானா? அவன் எங்களைப் பல நாட்களாக ஏமாற்றியவன். இனறு அவனை நாங்கள பிடித்தே ஆக வேண்டும்' என்று கேட்டார்கள்.

பெரியவரோ ஒன்றும் தெரியாதவர்போல் 'இங்குதான் அம்மா நான் வெகு நேரமாக இருக்கிறேன். ஆனால் இங்கு யாரும் வரவில்லையே. நானும் பார்க்கவில்லையம்மா' என்று சொல்லி விடுகிறார். வந்தவர்கள் மிகவும் கோபமும், வருத்தமுமடைந்து 'பயல் இந்தத் தடவையும் நம் எல்லோரையும் ஏமாற்றி விட்டான். இருக்கட்டும், மற்றொரு நாள் பார்த்துக் கொள்ளுகிறோம்' என்று கூறிவிட்டு அவரவர் தந்தம்வீடு நோக்கித் திரும்பிச் செல்லலாயினர்.

இவையனைத்தையும் பானை உள்ளே இருந்த கண்ணன் அறிந்து ஸந்தோஷம் அடைகிறான். மாயன் தாத்தாவைக் கூப்பிட்டு 'தாத்தா இனிமேல் என்னை வெளியேற்றி விடுங்கள். எல்லோரும் போன பிறகும் ஏன் தாத்தா என்னை இன்னும் மூடி வைத்திருக்கிறீர்கள்' என்றுகேட்டான். அதற்கு தாத்தா ஒன்றும் பதில் சொல்லாமல் வெறுமனே இருக்கலானார்.

தயிர்ப் பானையின் உள்ளே இருப்பவன் யார் என்பது அந்த ஒன்றுமறியாத அப்பாவியான தயிர் விற்றுப் பிழைக்கும் ஏழையாகிற கிழவனாருக்கு நன்கு தெரியும் அவரும் குழந்தை மாயக்கண்ணனை எப்பொழுதாவது இந்த ஜன்மாவில் ஒரு தடவையாவது கட்டாயம் பார்த்துவிட வேண்டும் என்ற ஆசையில் துடியாய் துடித்துக் கொண்டிருநதவர்தான். அந்த சந்தப்பம இப்போது அவருககு நன்கு அமைந்துவிட்டது. அப்படியிருக்க உடனே மாயனை விட்டுவிடுவாரா அவர். அவரிடம் நன்கு வகையாக மாட்டிக் கொண்டான் திருட்டுக் கண்ணன். கண்ணன கூப்பிடக் கூப்பிட வெறுமனே வாய்மூடி மௌனமாக இருக்கிறார் அந்தப் பெரியவர்.

உள்ளே நம் குழந்தை கண்ணனோ மூச்சுவிட முடியாமல் தவியாத் தவிக்கிறான். மறுபடியும் தாத்தாவைக் கூப்பிடுகிறான். 'தாத்தா! ஓ பெரியவரே! இது என்ன விளையாட்டு. என்னால் உள்ளே மூச்சு விட முடியவில்லை. தயவு செய்து மூடியிருக்கும் பல்லாயை திறந்து என்னை வெளியேற்றுங்கள்' என்று திரும்பவும் வேண்டுகிறான்.

வசமாக மாட்டிக் கொண்ட மாயனிடம் கிழவனார் ஓர் கேள்வி கேட்கிறார். 'உன்னை நான் விடுவதானால் நான் கேட்பதை நீ கொடுக்க வேண்டும். அப்படியானால்தான் நான் உன்னை வெளியே விடுவேன், என்ன சொல்லுகிறாய்' என்று கண்ணனைக் கேட்கிறார். வேறு வழி தெரியாத கண்ணனும் 'அதை ஒப்புக் கொள்கிறேன்' என்கிறான்;

'எனக்கு மோக்ஷம் கொடுக்க வேண்டும்' என்கிறார் பெரியவர். "ஒன்றுமறியாத 4 வயதே ஆன என்னால் எப்படி கொடுக்க முடியும் தாத்தா" என்கிறான கண்ணன். மேலும் 'நீ கேட்பதே என்னவென்று எனக்குப் புரியவில்லையே, விவரம் சொல்' என்கிறான கண்ணன்.

அதற்குப் பெரியவர் 'நீ யார் என்பது எனக்குத் தெரியும், உன்னை நான் நன்கறிவேன். என்னிடம் நீ மறைக்க முடியாது. ஆலிலைப் பாலகனாய் அன்றுலகம் உண்டவனென்பது நானறிவேன். ஆக உன்னால் கட்டாயம் கொடுக்க முடிந்ததையேதான் நானும் கேட்கிறேன்' என்கிறார் பெரியவர். ஆக இதற்கு ஸம்மதித்தால்தான் உன்னை வெளியே விட முடியும் என்றும் தீர்மானமாகச் சொல்லிவிட்டார் பெரியவர்.

---

அடியார்க்கடியவன்,
கேத்தாண்டபட்டி (வ.ஆ.)

செய்வதறியாத மாயனும் வேறு வழியில்லாமல் அதை ஒப்புக் கொண்டு'உனக்கு மோக்ஷம் கொடுத்தேன், இனி என்னைவிடு' என்கிறான். கிழவனாரோ 'உன் பேச்சை, செய்கையை எப்படி என்னால் நம்ப முடியும்' என்று கேட்க கண்ணனும் 'சத்தியமாக உமக்கு நான் மோக்ஷம் கொடுத்தேன். என்னை விடும்' என்றான்.

இதன் பிறகும் தாத்தா அவனை வெளியேற்றாமல் வெறுமனே இருந்து விடுகிறார். உள்ளே கண்ணனுக்கோ மூச்சு முட்டுகிறது. ஏன் இனியும் பெரியவர் பானையைத் திறக்கவில்லை என்று ஏங்கித் தவிக்கிறான். உடனே கண்ணன் 'ஏன் தாத்தா தாமதம். நான்தான் உமக்கு சத்தியம் செய்து கொடுத்திருக்கிறேனே. இனியுமா என்னை நீர் நம்பவில்லை. உடனே பானையைத் திறந்து என்னைக் கொஞ்சம் காற்று வாங்குவதற்கு வெளியே விடும், மூச்சு திணறுகிறது' என்று கெஞ்சுகிறான்.

உடன் பெரியவர் அவனை மற்றொன்றும் கேட்கிறார். 'அப்பா கண்ணா, நான் மிகவும் நன்றிகெட்டவன் என்று நீ நினைத்துவிட்டாயா, என்ன? இந்தப் பானை இருக்கிறதே இது எனக்குத் தயிர், பால், மோர் விற்க உறுதுணையாக இருந்தது. இந்தப் பானைக்கு நான் என்ன உபகாரம் செய்ய முடியும் ஆகையால் அதை விட்டு விட்டு நான் மட்டும் மோக்ஷம் போவது என்பது நடவாத காரியம். ஆகையால் நீ எனக்குக் கொடுத்த மோக்ஷம் போல் இந்த தயிர் பானைக்கும் மோக்ஷம் கொடுத்தேன என்று சொன்னால்தான உன்னை விட முடியும்' என்று கண்டிப்பாய் சொல்லி விட்டார் பெரியவர். (இவனே முற்பிறவியில் சராசரஙகள் எலலாவற்றிற்கும் மோக்ஷம கொடுத்தவன் என்பது நம கிழவனாருக்கு நன்கு தெரியும்).

அதைக் கேட்ட குழந்தை பரந்தாமன் மிக மகிழ்ச்சியில் மூழ்கி திளைக்கிறான். பெரியவர்தம் குணத்தையும், நன்றி மறவாததையும் மாயன் (ஆலின் இலைப் பாலகன்) மிகவும் மெச்சுகிறான். அதன்படியே அசேதனப்பொருளான 'அந்தத் தயிர் பானைக்கும் மோக்ஷம் கொடுத்தேன' என்கிறான் மாயவன். இருவரும ஆனந்தமடைகின்றனா.

தயிர்ப் பானையின் மூடியும் திறக்கிறது. சிறிய உருவில் குழந்தையாம் நம் கண்ணனும் பக்தி முதிர்ந்த அப்பெரியவருககு ஸேவை ஸாதிக்கிறான். ஏழை இடையனன அப்பெரியவரும் குழந்தையை உச்சிமோந்து மார்போடு வைதது குதூகலம் அடைகிறாா. கண்களால அவன் உருவைக் கண்டு கைகூபபி, வாய்ப்பொத்தி, இனபக் கடலில் திளைககிறார்.

ஆக தம் பகதியால் மட்டுமே உலகை ஆளும் பரமனை ஒரு தயிர்ப பானையில் அடைத்து அவனிடம சுலபமாக மோக்ஷம் வேண்டிப்பெற்று நமக் கெல்லாமும் ஒரு வழியை வகுத்துக் கொடுத்தாா பெரியவர். ஆக இதனால் நாம தெரிந்து கொள்வது பக்தியினாலும், அன்பினாலும் நாம் எப்பெருமானை சுலபமாக அடைய முடியும் எனபதே. சிறுவாகளான நீங்களும் (நானும்) எல்லோரும் சேர்ந்து கண்ணன் புகழ்பாடி அவரை நாமும் பக்தி எனனும் கயிற்றால் கட்டி அனுபவிக்கலாம வாரீர்!

★

# ★ ★ கர்ப்பம் காத்த கண்ணன் ★ ★

பாரத யுத்ததிலே அனைவரும் இறந்தபின் பீமனுடைய கதாயுதத்திற்குப் பயந்தவனாய் துரியோதனன் மட்டும் எஞ்சி ஒரு தடாகத்திலே போய் ஒளிந்து கொண்டான். அது மாலைநேரமானதால் சந்தியா வந்தனம் பண்ணுவதற்காக துரோணரின் மகன் அசுவத்தாமன் அத்தடாகத்திற்கு வந்து சேர்ந்தான். அங்கு ஒளிந்து கொண்டிருந்த துரியோதனனைப் பார்த்து விவரம் அறிந்தான்.

உடனே துரியோதனன் அசுவத்தாமனைப் பார்த்து, 'அசுவத்தாமா! உன்னைப் படைத்தளபதியாக்கவில்லை என்பதற்காக என் மீது கோபம் கொள்ளாதே. இனி என்னால் இப்பாண்டவர்களை வெற்றி கொள்ள முடியாது. ஆகையால் நீ இப்போது பாண்டவர்களைப் பழி வாங்கி அவர்கள் ஐவரின் தலைகளையும் கொயது இன்று இரவிற்குள் வருவாயானால் நமக்கு நாடு கிடைக்கும். அதில் உனகது பாதி ராஜஜியம் தருவேன்' என்று இன்னும துர்புத்தி நீங்காதவனாய் பேசினான். இதைக் கேட்ட அசுவத்தாமன் தன் தந்தையாகிய துரோணரைக் கொன்றவர்களைப் பழிவாங்க இதுவே தக்க தருணம் என று எணணி அவ்வாறே செய்வதாகக் கூறிவிட்டு பாண்டவர்கள் தங்கியிருககும் பாசறைக்குச் செனறான்.

"எல்லோருடைய செயலும், பேச்சும், எணணமும் என அதீனததிறகு உட்பட்டது" என று கீதையிலே அருளிய கண்ணன் இதை அறியாமல் இருப்பாரா? தன் மனத்திலே இதை சங்கல்பித்துக கொணடு அன்று இரவு பாண்டவர்கள் ஐவரையும திரௌபதியையும் அழைத்துக் கொண்டு உலாவர வெளியில் சென்று விட்டார். அந்த சமயம் பாாத்து பாசறைக்குள நுழைந்த அசுவத்தாமன் உறங்கிக் கொண்டிருந்த இளம் பஞ்ச பாண்டவர்கள் ஐவரின் தலைகளையும் பாண்டவர்கள் என நினைத்து கொய்து துரியோதனன்முன் குருதி சொட்டச் சொட்ட வைத்தான்.

இதைப் பார்த்த துரியோதனன், "அசுவத்தாமா என்ன காரியம் செய்தாய்?" என்று கூறினான். அப்பொழுதுதான் அசுவத்தாமன் தான் செய்த தவறை உணர்ந்தான். உடனே பாண்டவர்கள் தன்னைக் கொன்று விடுவார்கள் என்று உயிருக்குப் பயந்துகொண்டு ஓடி ஓர் மலையின் அடிவாரத்திலே பதுங்கிக் கொண்டான்.

வெளியில் சென்றிருந்த பாண்டவர்கள் பாசறைக்குள் நுழைந்ததும் இதைக் கண்டு திடுககிட்டனர். பதை பதைத்தனர். திரௌபதியோ தன் குழந்தைகளின் தலையில்லா முண்டத்தைக் கணடு வயிறறில் அடித்துக் கொண்டு புலம்பினாள். பிறகு ஸ்ரீ கிருஷ்ணனைப் பார்த்து "கண்ணா இக் காரியத்தைச் செய்தவர் யார்?" என்று கேட்டாள். கண்ணனும் தன் ஞானதிருஷ்டியினால் பார்த்து அசுவத்தாமனதான் இக்காரியத்தைச் செய்தான் என்று கூறினார். உடனே பீமனும் அாஜுனனும் அவனைத் தேடி தங்கள் ரதத்தில் புறப்பட்டார்கள்.

இறுதியில் மலையடிவாரத்தில் ஒளிந்து கொண்டிருந்த அசுவத்தாமனை அர்ஜுனன் கண்டு பிடித்து தன தேர்ச் சக்கரத்திலே கட்டி இழுத்து வந்து திரௌபதியின் கால்களில் தள்ளினான். பிறகு கையிலிருந்த கூர்வாளால் அசுவத்தாமனின் தலையை அறுக்கத் துணிந்து கையை ஓங்கினான. உடனே தருமர் குறுக்கிட்டு "பார்த்தா! உயிருக்குப் பயந்து ஓடியவனைக் கொல்லுதல் க்ஷத்திரிய தர்மம் ஆகாது. அன்றியும் இவன் ஒரு அந்தணன். அந்தணனைக் கொல்லுதல் கூடாது என்று மனு தர்ம சாஸ்திரங்கள் இயம்புகின்றன ஆகையால் இவனை விட்டு விடு" என்று பதிலளித்தார். திரௌபதியும் அர்ஜுனனை நோக்கி, "பிரபோ! நான்தான் புத்திரர்களை இழந்து சோகத்தில் மூழ்கித் தவிக்கிறேன். அதுபோல் இவன் தாயாருக்கும் இவனால் புத்திர சோகம் ஏற்பட வேண்டாம். இவனைக் கொல்லாமல் உயிர்ப்பிச்சை அளித்து அனுப்பி விடுங்கள்" என்று கூறினாள். இவைகளைக் கேட்ட பீமனும், அர்ஜுனனும் ஆத்திரமும் கோபமும் அடங்காமையினால் அசுவத்தாமனின் மூக்கையும் காதையும் அறுத்து தலையை மொட்டை அடித்து பாதி மீசையையும் மழித்து அங்கஹீனப் படுத்தித் துரத்தி விட்டார்கள்.

இவ்வாறு அவமானப்பட்ட அசுவத்தாமன் இவர்களைப் பழிவாங்க வேண்டும் என்ற தீய எண்ணம் பூண்டு சிவனை நோக்கிக் கடுந்தவம் புரிந்தான். இதற்கிடையில் பாரதயுத்தம் முடிந்து

---

திரு த இராமமூர்த்தி-திருச்சி.

---

தர்மர் ராஜ்ய பரிபாலனம் நடத்தி வந்தார். அசுவத்தாமனின் தவத்திற்கிணங்க சிவபெருமான் அவனுக்குக் காட்சி அளித்தார். அசுவத்தாமன சிவனை நோககி, "பரமேஸ்வரா! எனக்கு ஒரு அஸ்திரம் (அம்பு) அருள வேண்டும். நான் எய்யும் அஸ்திரமானது தாயின் வயிற்றிலுளள கருவை மட்டும் சிதைத்து அழிக்க வேண்டும்" என்று வேண்டினான். சிவபெருமானும் அங்ஙனமே

ஆகும் எனக் கூறி மறைந்தார். அதற்கு ''அபாண்ட வாஸ்திரம்'' என்று பெயர். அதாவது பாண்ட வர்களை அழிக்கும் அஸ்திரம் என்று பொருள்.

இவ்வரத்தை பெற்ற அசுவத் தாமன் அர்ஜுனனைக் கொல்லுதைக் காட்டிலும் அவர்களின வம்சத் தையே பூண்டோடு அழிக்க திட்ட மிட்டான். ஏனெனில் அப்போது குரு வம்சத்திலே துரியோதனாதிகள் வரிசையில் பாரதப் போரில் ஒரு வரும் உயிர் பிழைக்கவில்லை. பாண் டவர்கள் இருந்தாலும் அவர்களின் குழந்தைகள் இளம் பஞ்ச பாண்டவர் கள் இல்லை; இந்நிலையில் குருவம்சம் வளர ஒரே ஒரு வழிதான் உள்ளது. அதாவது அர்ஜுனனின் மகன் 'அபி மன்யு' உத்தர தேச மன்னனின் மகளான உத்தரை என்பவளை மணந்து கொண்டு ஒரு சில மாதங் களே மாமனார் வீட்டில் தங்கியிருந் தான். பிறகு பாரதப் போரில் கலந்து கொண்டு ஜயத்ரதனால் வஞ்சக மாகக் கொல்லப்பட்டான். ஆகை யால் அபிமன்பு மூலமாக உத்தரை கர்ப்பவதியாக உள்ளாள். இவள் வயிற்றிலுள்ள சிசு ஒன்றுதான் குரு வம்சத்தின் குலக்கொழுந்து என் பதையறிந்த அசுவத்தாமன் அபாண்ட வாஸ்திரத்தை உத்தரையின் கர்ப் பத்தை நோக்கி ஏவிவிட்டான்.

உடனே அபாண்ட வாஸ்திரமானது உத்தரை கர்ப்பத்திற்குச் சென்று சிசுவைத் தாக்கியது. அதனால் திடீ ரென்று உததரைக்கு வயிறு எரிச்ச லும் வலியும் ஏற்பட்டுத் தாங்க மாட் டாதவளாய் துடித்தாள். உடனே இராஜ வைத்தியங்களும் மருத்துவப் பெண்களின சிகிச்சையும் அளித்தும் பலன் இல்லை. தன் மாமியாராகிய திரௌபதி அன்று ராஜ சபையில் மானத்திற்காகக் கண்ணனிடம் சரண டைந்ததை எண்ணி தானும் கிருஷ் ணனை தியானித்து, 'எம்பெருமானே! அன்று வனத்தில் எங்கள் மாமியாரை யும் மாமனார்களாகிய பாண்டவர்கள் ஐவரையும் துரியோதனன் சூழ்ச்சி யால் செய்த துர்வாசர் சாபத்தைத் தடுத்து அருள் புரிந்தாயே! கண்ணா! அன்று சிறைச்சாலையில் தேவகி கர்ப் பத்திலிருந்து தோன்றி வசுதேவர், தேவகி இவர்களின் கம்ஸ பயத்தை நீக்கி நல்லருள் புரிந்தாயே! அது போல் என் வயிற்றில் வளருகின்ற சிசுவிற்கும் எவ்வித ஊறும் நேராமல் நீ தான் காக்க வேண்டும்'' என்று சரணடைந்தாள்.

பக்தர்களின் கூக்குரலைக் கேட் க சகியாதவனும் அவர்களுக்கும் அருள் புரிய காத்துக் கிடக்கும் கார்மேக வண்ணன அல்லவா நம் கண்ணன். பகவத் கீதையிலே 14-ம் அத் தியாயத்திலே 3-வது சுலோகத் திலே,

'' மம யோனிர் மஹத்ப்ரஹ்ம தஸ்மின்
கர்பம் ததாம்யஹம்
ஸம்பவ! ஸர்வபூதானாம் ததோ
பவதி பாரத'' ||

அதாவது ''சகல ஜகத்திற்கும் பிறப் பிடமாய் 'மஹத்பிரம்மம்' என்று சொல்லப்பட்ட எனது பிரகிருதி யினிடத்து ஜீவனென்றும் சேதனத் தொகை என்றும் கூறப்பட்ட மேலான பிரகிருதியானது சகல பிராணிகளுக்கும் விதை முதலாயிருத்தலாலே காப்பத் தைத் தரிக்கிறேன்'' என்று கூறிய ஸ்ரீ கிருஷ்ணன் வலது கை கட்டை விரல் அளவு தான் உருவம் எடுத்துக் கொண்டு சங்கு, சக்கரம், கதை, பத்மம தாங்கிய சதுர்ப்புஜனாய் கோடி சூர்யப் பிரகாசமாய் விளங்கு கின்ற கிரீட மகர குண்டலங்களைத் தரித்தவனாய மஹாலக்ஷ்மீ ஹாரனாய் எல்லோருடைய கர்ப்ப தொடர்பை நீக்குகின்ற பகவான் உத்தரை யின் கர்ப்பத்தில் தோன்றி தன் கதையினால் அந்த அஸ்திரத்தை விரட்டினார். காப்பத்திலேயே தானும் இருந்து கொண்டு அந்த சிசுவைக் காப்பாற்றினான்.

பத்து மாதம் கழித்து உத்தரை ஓர் ஆண் குழந்தையை ஈன்றாள். அக்குழந்தை அஸ்திரத்தின் வெம்மை தாளாமல் உயிர ஊசலாடிய நிலை யில் கரிககட்டைபோல் கருப்பாய் இருந்தது. உத்தரை, குழுமிருந்த மகரிஷிகளிடம் 'இக்குழந்தை உயிர் பெற என்ன வழி?' என்று கேட்டாள். அதற்கு அவர்கள் மனத்தினாலும் களங்கமில்லா நைஷ்டிக பிரம்மச் சாரி ஒருவன் கரஸ்பரிசத்தால்தான் உயிர பிழைப்பான் என்று கூறினார் கள். உத்தரை இந்நிலையிலும் கிருஷ் ணனைத் துதித்தாள். துவாரகாவாசி யான முகுந்தன் அவள்முன் தோன்ற உத்தரை அககுழந்தையை உயிர் பெற்றுத் தருமபடி கூறினாள் கிருஷ் ணன் தான் பொய்யாக, ''நான சிறு பிள்ளையில் கோபிகள் வஸ்திரத்தை திருடியவன். நான் எப்படி நைஷ்டிக பிரம்மச்சாரியாக முடியும்'' என்று கூறினார். உத்தரை அதை மறுத்து, 'மாதவா நீ என்னிடம் பொய் சொல் லாதே. வேதங்கள் எல்லாம் உன்னைத் தான் பரம புருஷன் என்றும் நித்ய பிரம்மச்சாரி என்றும் இயம்புகின் றன' என்று கூறி மன்றாடினாள். பச வானும் சம்மதித்து வேதங்கள் என்னை 'பவித்ராணும் பவிதரம் யோ மங்களா நாம் ச மங்களம்' என்று கூறுவது உண்மையானால் இக்குழந்தை உயிர் பெறட்டும் என்று அக்னியை சாட்சியாக வைத்து சததியம் செய்து குழந்தையைத் தொட்டார். குழந் தையும் உயிர பெற்று பொலிவுடன் திகழந்தது. கிருஷ்ணனே அக்குழந் தைக்கு ''பரிஷத்'' என்று பெயரிட் டார். (பரி=சுற்றிலும்; ஈஷத்= பார்த்தல) அதாவது கர்ப்ப காலத தில் தனனைக் காப்பாற்றிய கிருஷ் ணன இவன் தானா? என்று சுற்றிச சுற்றிப் பார்த்தான என்பது பொருள். ஆகையால், ஆணாக இருந தாலும் சரி பெண்ணாக இருந்தாலும் சரி எந்த நிலையிலும் ஸ்ரீ கிருஷ்ணனை பகதியுடன் தியானிதத வர்களுக்கு அவன் அருள் புரிவான் என்பது திண்ணம்; நாமும் அவனை மனதால் தியானித்து அருள் பெறு வோமாக! ★

# வேதம்-ஒரு சிறு விளக்கம்

வேதத்தின் தோற்றம் :

வேதம் என்பதன் பொருள் ஞானம் (அறிவு) என்பதாகும். வேதம் என்பதற்கு அறிவிக்கின்றது என்ற பொருளும் உண்டு. பிரத்யக்ஷ, அநுமானங்களால் அறிய முடியாதவைகளை, வேதமானது அறிவிக்கின்றது. அது ஈஸ்வரனிடமிருந்து தோன்றி, பிறகு மஹரிஷிகளின் ஞான வாயிலாக ஜனங்களுக்கு வாக்கிய (எழுத்து) ரூபமாய் அருளப்பட்டது.

"யுகங்களின் முடிவில் வேதங்கள், இதிகாசங்கள் முதலியன ஈஸ்வரனிடம் மறைந்து விட்டன. பிறகு பிரம்மாவின் சிருஷ்டி ஆரம்பத்தில் அவரது அருளைப்பெற்ற மஹரிஷிகள் தவஞ்செய்து அத்தவத்தின் மூலமாய் அவற்றைத் திரும்பப் பெற்றார்" என்று வியாஸ முனிவரால் கூறப்படுகிறது.

வேதம் ஒருவனால் உண்டாக்கப்பட்டதன்று. ஆகவே அது அபருஷேயம் (புருஷனால் உண்டாக்கப்படாதது) என்பர். ஈஸ்வரன் போன்று வேதமும் நித்யமானது. அது ஈஸ்வரவடிவமாயுள்ளது. ஆகவே இதற்கு சப்தப்பிரம்மம் என்ற பெயருமுண்டு.

வேதம் கற்கும் முறை ;

மகரிஷிகள் தங்கள் சிஷ்யர்களுக்கு வேதத்தை சொல்லிக் கொடுத்தார்கள். சிஷ்யர்கள் அதனை மனப்பாடம் செய்யும் வரை திரும்பத் திரும்பக் கேட்டு தங்கள் மனத்தகத்தே நிறுத்தினர். பிறகு அவர்களும் தங்கள் சிஷ்யர்களுக்கு அத்யயனம் செய்து வைக்க இம்மாதிரி குரு சிஷ்ய பரம்பரையாக வேதம் உலகத்தில் பரவி வந்தது. அதனாலேயே அதற்கு சுருதி (காது) என்று பெயர் வந்தாயிற்று. நாம் ஒலிக்கும் அக்ஷரங்களுக்கு (எழுத்து) ஏற்படுத்திக் கொள்ளுவதற்கு முன்னர் கற்பிக்கும் முறை முற்கூறிய விதமே ஆகும். எழுத்துக்கள் ஏற்பட்ட இக்காலத்திலும் (Modern days) வேதத்தை மாத்திரம் பழைய முறைப்படித் தான் கற்கவேண்டும்

ஸ்வரத்தின் முக்கியத்துவம் :

வேதத்தில் ஸ்வரம் தப்பாக கூறுதல் மிகுந்த குற்றமாகும். நாம் ஒரு நன்மையைக் கருதி வேத வாக்கியத்தைச் சொல்லும்போது ஸ்வரத்துடன் அக்ஷரங்களை தப்பிதமில்லாமற் சொல்ல வேண்டும். ஸ்வரம் மாறி உச்சரித்தால் நமக்குத் தீமையை விளைக்கும். எதுபோல் என்றால் "குளிக்கச் செல்லுங்கால் சேற்றைப் பூசிக்கொண்டது போல் ஆகிவிடும்". ஸ்வரத்தால் கருத்துக்கள் மாற்றமாகி பயன்களும் மாறுபடாமல் காத்துக் கொள்ளல் வேண்டும்.

ஸ்வரங்கள் மூன்று :

1. உதாத்தம், 2. அநுதாத்தம், 3. ஸ்வரிதம் என்பன. உயர்த்தி உச்சரிப்பது உதாத்தம்; தணிந்து உச்சரிப்பது அநுநாத்தம்; உயர்த்தாமலும் தணிக்காமலும் ஸமமாய் உச்சரிப்பது ஸ்வரிதம் எனப்படும்.

வேதம் நான்கு :

1. ரிக்வேதம், 2. யஜுர்வேதம், 3. ஸாமவேதம். 4. அதர்வணவேதம். வேத வியாசர் முதலில் ஒட்டு மொத்தமாக இருந்ததை மேற்சொன்னது போல் நான்காகப் பிரித்து தன் சிஷ்யர்களான 1. பைலன், 2. வைசம்பாயனன், 3. ஜைமினி, 4. ஸுமந்து முதலானோர்களுக்கு உபதேசித்தார். சிஷ்யர்கள் தத்தம் சிஷ்யபரம்பரை மூலமாய் அவற்றை பரவச் செய்தனர் இவ்வுலகத்திற்கு.

ரிக்வேதம் :

இது முதன்மையான வேதம். ஆகவே இதனை ஆதிவேதம் என்று கூறுகின்றனர். யாகத்தின் பொருட்டு அதற்குண்டான கிரியைகளைப் பற்றிச் சொல்வதும் அந்த யாகத்தின் பொருட்டு அழைக்கப்படும் தெய்வங்களுக்குரிய மூலமந்திரத்தையும் கூறுகிறது. இவையெல்லாம் அறிந்து செய்கின்றவன் ஹோதா என்ற பெயருடன் அழைக்கப்படுவான்.

திரு. S. நாராயணசுவாமி, M.A.B.Ed.,
இனாம்பூர்.

யஜுர் வேதம் :

யாகத்தில் தேவதைகளை அழைத்தல், அவர்களை ஸ்துதித்தல், வேதிகை, யூபஸ்தம்பம் முதலிய விவரத்தையும், பெரிய யக்ஞமான ராஜஸூயம், அசுவமேதயாகம் முதலிய அதிவிசேஷ விவரத்தையும்— கிரகஸ்தன் தன் வாழ்நாளில் தினந்தோறும் செய்யவேண்டிய ஔபாஸனம், அக்னிஹோத்ரம் முதலிய விவரங்களையும் எடுத்துக்கூறுவது. மேலே சொன்னதை அறிந்து செய்கின்றவன் அதர்வயு எனப்படுவான்.

ஸாம வேதம :

யாகத்தில் அதிஷ்டான தேவதையாகிய பகவானை ஸ்துதிக்க வேண்டிய கிரியைகளைப் பற்றிக் கூறுவது. இவ்வேதம் இசை வடிவமாகவே உள்ளது. இசையின் மகத்துவத்தையும் அதன் நுண்கருத்தையும், பகவான் எவ்வாறு இசைக்கும் ஆட்பட்டுள்ளார் என்பதனையும் கூறுகின்றது. இசையில் சகல கோடி ஜீவராசிகளும் தங்களை மறப்பதும் நேரிடும். ஆகவே ஈஸ்வரன் "ஸாமகானப்ரியன்" என்ற சிறப்பும் பெயரும் பெற்

றுள்ளான். ஸாமகானத்தை ஓதுகின்றவன் உத்காதா எனப் பெயர் பெறுகிருன்.

அதர்வணவேதம :

மேற்கூறிய யாகத்தால்—ஹோதா, அதவர்யு, உத்காதா இவர்களால் நேரிடும் குறைபாடுகளை நிவர்த்தி செய்யவும் அம்மூவர்களின் கிரியைகள் தப்பிதமில்லாமல் நடககும்படி அவற்றை மேல்பார்த்துக் கொண்டு பிரம்ம வரணத்திலிருப்பவன் பிர்ம்மா எனப்படுவான்.

அதர்வண வேதத்தால் அரசர்களுக்கு நேரிடும் ஆபத்துக்களை நிவர்த்தி செய்யவும் உலகத்திற்கு துர்பிக்ஷத்தைப் போக்கி ஸுபிக்ஷத்தை உண்டு பண்ணவும், மந்திரயந்திரத்திஞல காரியம் சிததி பெறவும், துஷ்டர்களையும், பிரேத பைசாச ராக்ஷஸ குணத்தை விரட்டி அழிக்கவும், முழுக்க முழுகக மநதிர பிரயோகத்திஞல் எலலாம அடையலாம் என்பதனை பற்பல விதமான கிரியைகள் மூலம் கூறுகின்றது இவ்வேதமான அதர்வண வேதம்.

வேதங்களின் பிரிவுகள் ;

வேதங்களில் 1. கர்மகாண்டம், 2. உபாஸஞகாணடம், 3. ஞான காண்டம் என்ற மூன்று பிரிவுகள் உள்ளன. கர்மகாண்டம் — கர்மங்களின் ஸ்வரூபத்தையும, உபாஸஞ காண்டம்—யோகத்தின் ஸ்வரூபத்தையும், ஞான காண்டம்—பிர்ம்மத்தின் ஸ்வரூபத்தையும் விளக்குகின்றன.

ஞான காண்டம் வேதாந்தங்கள் என்றும உபநிஷத்துகள் என்றும் கூறப்படும்.

வேதாநதம் என்பது — வேதத்தின் அநதம் (முடிவு), உபநிஷத் என்பது-பிரம்மததின் அருகாமையில் சேர்ப்பிப்பது.

உபவேதங்கள :

லோகத்தின் க்ஷேமத்தைக் கருதி ரிஷிகளின் வாக்கில் உண்டானது நான்கு உபவேதங்களாகும். அவையாவன 1. ஆயுர்வேதம, 2. அர்த்த வேதம், 3. தநுர்வேதம், 4. காந்தர்வ வேதம் எனபதாகும்.

ஆயுர்வேதம் :

இவ்வேதம் உயிர்களுக்கு உண்டாகும் வியாதிகளையும் அவைகளைப் போக்கும் விதத்தையும் மேலும் ஆயுள் விருத்தியையும் பற்றிக் கூறுகிறது.

அர்த்தவேதம் :

இவ்வேதமானது யாகத்திற்கு வேண்டிய ஹோம திரவியங்கள், தக்ஷிணை, கிரியைகள் முதலியவற்றைக் கூறுகிறது.

தநுர்வேதம் :

இவ்வேதமானது அரசர்கள் தன் எதிரிகளிடம் யுத்தம் செய்யுங்காலத்தில் அம்புகளை எப்படித் தொடுப்பது என்றும், எப்படி வியூகம் அமைப்பது, அமைத்தபிறகு சரமாரியாக அம்புகளை ஏவுதல் பற்றியும் சொல்வதாகும்.

காந்தர்வ வேதம் :

இவ்வேதத்தில் ஏழு ஸ்வரங்களைப் பற்றிக் கூறி (ஸங்கீதம்) ஏழு ஸ்வரங்களின் பேதத்தால் குரலின் ஆரோகணம் (ஏறுதல்) அவரோகணம் (இறங்குதல்) முதலானதை ஏற்படுத்திக் குரலின் மாறுதலால் பற்பல விதமான கீதங்களைப் பாடுவதற்கு வேண்டிய மார்க்கங்களைக் கூறுகிறது. மேற்சொன்ன ஏழு ஸ்வரங்கள் கள் மயில், எருது, ஆடு, வீணை, குயில், குதிரை, யானை இவற்றின் ஒலிகளை ஒத்திருக்கும். ஸங்கீத சாஸ்திரத்தில் தேர்ச்சியுள்ளவருமான காநதர்வர்களுக்குப் (தேவர்களில் ஒருபிரிவினர்) பிரியமானதால் காந்தர்வ வேதம் எனப்படுகிறது.

வேதத்தின் அங்கங்கள் :

1. சிக்ஷை (கற்பிப்பது), 2. வியாகரணம் (நன்ருக்குவது), 3. சந்தஸ் (சந்தோஷப்படுத்துவது) 4. நிருக்தம் (நன்ருய்க் கூறுவது) 5. ஜ்யோதிஷம் (கிரகங்களைப்பற்றியது) 6. கல்பம் (அக்னி காரியத்தின் போது செய்ய வேண்டிய தந்திரமும் செய்கின்றவனைக் காப்பாற்றுவதும்)

வேதத்தின் உபாங்கங்கள் :

1. மீம்ஸா சாஸ்திரம் — (வேதத்தின் விளக்கம்), 2. நியாயஸாஸ்திரம் — (தர்க்க சாஸ்திரம்), 3. தர்ம சாஸ்திரம் (ஸ்மிருதிகள் அல்லது நல்ல மார்க்கங்கள்) 4. புராணம் (பழைமையான சரித்திரத்தைக் கூறுவது).

வேதத்தின் உண்மை

ஆன்மாக்கள் (Soul or Cit) கடைசியில் ஈஸ்வரனிடம் சேரவேண்டியதன் பொருட்டு ஆன்மாக்கள் தன் வாழ்நாளில் கடைபிடிக்க வேண்டிய வழிகளையும், நித்ய தர்மங்களையும் கூறுகிறது. மேலும், வேதங்களில் பரமனின் துதியை வலியுறுத்துகிறது. ஆன்ம தத்துவம், உலக தத்துவம், ஈஸ்வர தத்துவம் என்பதனை விளக்க வந்தன. ஆன்மாவை கர்மத்தினின்று பிரித்து ஞானமே பரம்பொருளை அடைய வழி எனக் கூறுகிறது. அப் பரம்பொருளை ஆன்மா அடைந்தால் பிறவி எடுத்த பயன் நிறைவு வருகிறது என்பதை விளக்க வந்தது தான் வேதம். அதுதான் உண்மைப் பொருளுமாகும். ★

## விலங்குகள், பறவைகள் வழிபட்ட சிவ ஸ்தலங்கள்

| | | |
|---|---|---|
| 1. | அணில், குரங்கு | —குரங்கணில் முட்டம். |
| 2. | ஆமை | —திருமணஞ்சேரி. |
| 3. | யானை | —ஆனைக்கா, காளஹஸ்தி, கோட்டாறு, பெண்ணுகடம், மதுரை, திருக்கானப்பேர், திருக்குற்ருலம். |
| 4. | எறும்பு | —திருவெறும்பியூர். |
| 5. | பசு | —திருவாமாத்தூர், திருஆவூர், பெண்ணு கடம், திருவாவடுதுறை, திருக்கொண்டீச்சுரம், பட்டீச்சுரம். |
| 6. | பாம்பு | —காளஹஸ்தி, திருநாகேச்சுரம், நாகப்பட்டிணம், கும்பகோணம், நாகேஸ்வர சுவாமி கோயில், திருப்பாம்புரம். |
| 7. | புலி | —திரு ஓமாம்புலியூர், திருவெருக்கத்தம் புலியூர், திருப்பாதிரிப்புலியூர் பெரும் புலியூர், பெரும்பற்றப் புலியூர். |
| 8. | சிங்கம் | —திருநல்லூர். |
| 9. | பன்றி | —திருச்சிவபுரம். |
| 10. | முயல் | —திருப்பாதிரிப் புலியூர். |
| 11. | குரங்கு | —குரங்குக்கா, தென் குரங்காடு துறை, வட குரங்காடு துறை. |
| 12. | காகம் | —குரங்கணில் முட்டம். |
| 13. | ஈ | —ஈங்கோய்மலை, திருச்சிற்றேமம். |
| 14. | கழுகு | —திருக்கழுக்குன்றம், வைத்தீசுவரன் கோயில். |
| 15. | சிலந்தி | —காளஹஸ்தி. |
| 16. | நாரை | —திருமயிலாடுதுறை, மதுரை. |
| 17. | மயில் | —திருமயிலாடுதுறை, மயிலாப்பூர் - சென்னை. |
| 18. | கரிக்குருவி | —மதுரை, திருவலிவலம். |
| 19. | வண்டு | —ஸ்ரீசைலம், திருவெண்டுறை. |
| 20. | தவளை | —ஊற்றத்தூர் (வைப்புத்தலம்). |
| 21. | நண்டு | —திருந்து தேவன் குடி. |
| 22. | மீன் | —திருச்சேலூர். |

தகவல்: கமலவேணி தனபதி.



## இங்கிந்த ஏழைக்குன் இருபாத வெளிச்சம்தா!

கவிஞர். நாமக்கல்நாதன்-ஈரோடு.

கூப்பிட்ட குரலுககுக குறைதீர முன்வந்து
   கரம்நீட்டு கின்ற பிழம்பே!
கொள்கையில் பிடிப்பற்ற சமுதாய வேட்கையின்
   குணம்நீக்க வந்த திருவே!
தீர்ப்புக்கு முன்நின்று யார்பக்கம் மெய்யென்று
   தெளிவாக்குகின்ற அறிவே!
திணவோடு திரிகின்ற இனத்தோடு போர்கொண்டு
   தீமையைப் போக்கும் அருளே!
வாய்ப்புற்ற போதெலாம் வணக்கத்துக்குரியோரை
   வாழவைக் கின்ற தேவே!
வண்டாடும் குன்றத்தில் நின்ருளும் பெருமாளே
   வழிகாட்டி வாழ்வு தாநீ!

அன்புக்குள் உறைகின்ற ஆழிசூழ் மன்னனே
   அரங்கனேகார் வண்ணனே!
அனந்தபல் லுயிர்க்கெலாம் அமுதீந்து சுகமூட்டும்
   ஆதவன் சோதி வடிவே!
நம்பிக்கை கொளகினற நல்லெண்ணமுடையோர்க்கு
   நலமூட்டும் ஆதிமுதலே!
நாளுக்கு நாளௌனறன் தோல்விக்கு விடிவாக
   நற்புத்தி தந்த சுடரே!
இனபுற்று மகிழ்கின்ற இதயத்தில் என்றென்றும்
   எழிலூடடு கின்ற முகிலே!
இங்கிந்த ஏழைக்குன் இருபாத வெளிச்சம்தா
   என்னுள்ளே ஒளிர வாநீ!

கண்கெட்ட பிறகிந்தக காரியம் என்றுநீ
   கடைக் கண்ணில் பார்க்கிருயோ?
காவியம் படைககினற கவிஞனுக் கிதுவெலாம்
   கற்பனை என்கிருயோ?
என்புததிக் கிவையெலாம் எட்டாத செயலென்று
   இறையேநீ சிரிக்கிருயோ?
இனியாவ தென்வாழ்வின இருள்நீகக வருவாயோ
   ஏழுமலை வைகுண் டேசா?
விண்முட்டும் காட்சியாய் விளங்கிடும் விஸ்வமே
   வினைதீர்க்கும் சீனிவாசா!
வெல்வார்க்கு வழிகாட்டும் வேதத்தின் கருவாகி
   விளையாடும் வேங்கடேசா!

## நிலையானவன்



மலைஏறி நின்ருலும்
நிலைதாழும் அடியார்க்கு
நிலையான கடவுள் நீயல்லவா
(ஏழுமலை...)

அலையான துன்பங்கள்
அளவினறி வந்தாலும்
ஆதரிக்கும் அழகுத தாயல்லவா
(ஏழுமலை...)

அலர்மேவும் மங்கைசேர் அழகான
மார்பன
அடியாரின் துயரங்கள் அன்
போடு தீர்ப்பான்
பலகாலும் தொழுமஅடியாா
பகதியைப் பாாப்பான்
பரிவோடு திருவருள் பாசத்தைச
சேர்ப்பான.
(ஏழுமலை....)

ஒன்ருன சககரத்தில உலகததை
நாட்டி
உயிாகளைக சாபபாதற்குச் சங்
கொலியைக கூட்டி
நனருன ஒரு காததால் நலல
அருள காட்டி
நாள்தோறும தஞ்சமென மறு
கரத்தை நீட்டி
(ஏழுமலை. )

புலவர். அ. க. முனுசாமி எம்.ஏ,
விழுப்புரம்

(4-ம் பக்கத் தொடர்ச்சி)
பேறு என்பதே இறை வழிபாட்டினால் பெறத் தக்க மேம்பட்ட பயன்; இச்செய்தியை உள்ளவாறு உணராத படி செய்வது ஆனமா தங்கியிருக்கும இந்த உடலின் தொடர்பே; ஆன்மாவின இயல்பு, உடல் இயல்பு, ஆனமா பெற வேண்டிய அரும்பயன, அதற்கு இடையூறாக இருப்பது, அவ் விடையூற்றை நீக்கும் கருவி என்பன வற்றை உள்ளவாறு அறிய உதவுவது மெய்யுணர்வே — என்ற செய்திகளைத் திருக்குறள் வாயிலாகக் காண்போம்.

'புக்கில் அமைந்தின்று கொல்லோ? உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு.
(குறள் 340)

வாதம் முதலியவற்றின் இருப்பிடமான உடம்பினுள் ஒதுக்கிருந்தே போந்த உயிருககு என்ஞான்றும் இருப்பதோர் இல் இதுகாறும் அமைநததில்லை போலும் — என்பது பரிமேலழகர் உரை.

அந்நோய்கள் இருக்க அமைந்த ஞான்று இருநதும், வெகுண்ட ஞான்று போயும், ஓர் உடம்பினும் நிலை பெறாது வருதலான் 'துச்சில் இருந்த' என்றார். பின்புறப்படாது புக்கே விடும் இல் அமைநததாயின், பிறர் இல்களுள ஒதுக்கிராது என் பதாம். ஆகவே உயிரோடு கூடி நிற்பதோா உடம்பும் இல்லை என்ப தாம்—என்பது விளக்கவுரை.

இதனால் உயிராகிய ஆன்மா உடம்பில் தங்குவது ஒதுக்குடிவாழ்க்கை என்பதும, உடம்பு வாதம் முதலிய நோய்கள் தங்குதறகே உரியது என பதும், உயிருககுரிய வீடுமேல் நோககிச் செல்லும் வீட்டுலகின கண் உள்ளது எனபதும், அங்குச் சென்று புகுநதால் அதை விடுத்து வேறு இடஙகளைத தேடும் நிலை அதறகு ஏற்படாது எனபதும் போதரும. அஃதாவது உயிர் தான் அல்லாத உடம்பைத தான எனறும் தனது அல்லாத உலகப் பொருளைத் தனது என்றும் கருதும் 'யான் எனது' என்னும் செருககினை வேரோடு விடுத்து, வானோராகிய தேவாகளும் எட்ட முடியாத உயாந்த உலகமாகிய வீட்டுலகத்தை எய்தி, இறையைச் சேர்ந்து தன்மை பெற்று இறையின் தாள நிழற்கீழ் நின்று அடிமை செய்ய உரியது என்பதும், உயிருக்கு ஒப்புயர்வு இல்லாத வீடுபேற்றை அடைவதுமே அரும்பயன் என்பதும் பெறப்படும்.

''கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைபபடுவர்
மற்றீண்டு வாரா நெறி'
(குறள் 356)

இம்மக்கட் பிறப்பின் கண்ணே உபதேச மொழிகளை அனுபவமுடைய தேசிகர்பால் கேட்டு, அதனால் மெய்ப்பொருளை உணர்ந்தவர், மீண்டும் இப்பிறப்பின்கண் வாராத நெறியை எய்துவர்.

இக்குறட்பாவினால் இப்பிறப்பில் கற்று மெய்ப்பொருளைக கண்டவர் வீடுபேறே உயிருக்கு உரிய பயன் என்றும் அதுவே மேற்கதி சென்று மீண்டு வாரா நெறி என்றும் அறிவார்கள் என்பது பெறப்படும்.

உயிருக்கு உரிய பயனாகிய வீடுபேற்றை மேற்கதிக்கண் சென்று அடையத் தடையாய் இருப்பது, நல்வினை தீவினை வயத்தான் உயிர்தங்கியிருக்கும் உடம்பே ஆதலின், உயிர் உடம்பின் கட்டறுத்தால் அல்லது மேற்கதிக்கண் செல்ல இயலாது என பதாம்.

மற்றும தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல
உற்றார்க்(கு) உடம்பும மிகை.
(குறள் 345)

பிறப்பறுக்க விரும்பும் ஆன்மாவுக்கு உடம்பும் மிகை எனவே உடமபின தொடர்புடைய ஏனைய உலகியல் பொருள்கள் மிகை என் பது கூறாமலே புலப்படும். எனவே, பிறப்பு அறுததலே ஆன்மாவின் அருமபயன எனபதும், அதறகுத் தடையாய இருப்பது உடம்பு என் பதும, இடைச் சுவராக உளள உடமபாகிய கட்டு அவிழநதால அல லது ஆன்மா பிறவிபபயனாகிய விடு பேற்றை அடைய இயலாது எனப தும் பெறப்படுகின்றன.

இடைச்சுவராக நடுவில இருக்கும் உடற்கட்டினை அவிழ்ப்பது இறையருளினால் ஆகுமேயல்லது ஆன்மாவின் தனி முயற்சியால் ஆகாது. ஒரு குருவி கட்டிய கூட்டினையே நம் மால் முறையாகப் பிரித்துக் காண முடியாது என்பதனைக் கண்கூடாகக் காண்கிறோம். அவ்வாறாக, நிறை யறிவும் பேராற்றலும் ஒருங்கே உடைய இறை உயிரின் வினைக்கு ஏற்றவாறு பிணைந்த இப்பொல்லா யாக்கையின் புணர்ப்பினை இவ் வான்மா தானே தன் முயற்சியால் அறுக்க அஃது அறுமோ? அறாது என்பதனை,

'பிறவிப பெருங்கடல் நீந்துவர், நீந்தார்,
இறைவன் அடிசேரா தார்'
(குறள் 10)

என்ற குறட்பாவில், இறைவன் அடி சேர்ந்தார் பிறவிப் பெருங்கடல் நீந்துவர், இறைவன் அடி சேராதார் பிறவிப் பெருங்கடல் நீந்தார் என உடன்பாட்டானும் எதிர்மறையானும் வள்ளுவர் பெருமான் விளக்கிப் போந்தார்.

ஆன்மா உடலில் நின்று அவ் வுடம்பைத் தான் தரித்தும் அவ் வுடம்பை ஏவியும் தான் முன் செயத வினை வழி ஒழுகும். இறைவனே தன் கருணையால் இயங்கு திணைக்கண்ணும் நிலைத்திணைக்கண்ணும் உயிராகத் தங்கியுள்ளான். தன் நினைவாலும் தன் வடிவாலும் அவற்றைத தரித்தும் உள்ளான. தன் நினைவால் அவற்றை ஏவியவாறு உள்ளான. ஆன்மா தன்முன்னை வினைவழிச் செயற்பட, அதன் விருப்பங்களைப் பொறுத்து நன்மை தீமை தரும் செயல்களில ஆனமா ஈடுபடுதற்கு இசைகிறான். கருணைக்கும் நடுவுநிலைக்கும் இருபபிடமாக உள்ள இறைவன், யான எனது என்னும் செருககினை அறுதது நிழல்போலத் தனனைச சார்ந்த ஆனமாக்களுக்கு, உடல் தொடர்பால் ஏறபட்ட அறி யாமையைத் தொலைதது அவ்வான் மாக்களுககுப் பேரறிவு நலகி, வினைகளை ஒழிதது, அவை எடுத்துள்ள உடம்புகளின முடிவில மீளுதல் இல் லாத வீட்டு நெறியில செலுத்தி, தன தன்மை பெற வைத்து, தன் தாள் நிழறகீழ் நிலைபெறற தொண்டாற்றும் பேரின்பத்தில் நிலைபெறச் செய்து, ஆன்மாக்களின் ஈடேற்றத் தால் தான் களிக்கிறான் என்று சான் றோர்கள் குறிப்பிடுகின்றனர்.

இததகைய இறையருள் முகத் தற்கு இறைவழிபாடு ஆற்றுதல்

வேண்டும். இறைவழிபாடு ஆற்று தற்கு இறைநிலை இன்னது என்ப தனை அறிதல் வேண்டும். இறை நிலையை அறிவதன்முன் ஆன்மா தன் நிலை யாது என்பதனை உணர் தல் வேண்டும். அதனோடு தான் இறையை அடைதற்குத் தடையா யுள்ளன – ஆன்மா தன் வினை வழி வந்த துன்ப இன்பங்களை நுகரும் இடமாய் அமைந்த உடல், உலகம், நுகர்பொருள்கள ஆகிய ஊறு, ஓசை, ஒளி, சுவை, நாற்றம் என்ற புலன்கள், புலன்களை நுகரும் கருவி களாகிய மெய், வாய், கண் மூக்கு, செவி என்ற ஐம்பொறிகள, இவற் றிற்குக் காரணங்களாகிய 24 தத்து வங்கள் என்பனவற்றையும், அறி வற்ற ஜடப் பொருளனைத், ஆன்மா வாகிய சித்துப்பொருள் ஆகியவற் றையும் திரிபுஅற உணர்தல் வேண் டும். இறைநிலை இன்னது என்பது சென்ற பத்தியில் விளக்கப்பட்டுள் ளது.

இங்ஙனம் உடல்நிலையையும் உயிர்நிலையையும் இறைநிலையையும் அறிவதனையே மெய்யுணர்வு என் றும், பேரறிவு என்றும், மெய்ஞ் ஞானம் என்றும், தத்துவ ஞானம் என்றும் நம் முன்னோர் குறிப்பிட்ட னர். இவற்றுள் பொறியறிவால் உணரப்படுவது உடல்நிலை. மன உணர்வால் மட்டுமே அறியப்படு வது உயிர்நிலை. இறைநிலை, பொறியறி வாலோ மன உணர்வாலோ அறியப் படுவது ஒன்று அன்று. உடல் உயிர் என்ற இருவகைப் பொருள்களுக் கும் மேம்பட்டது. எல்லாம் தன் னைச் சார்ந்திருக்க எல்லாவற்றிலும் தான் உடல்மிசை உயிர் எனக் கரந்து எங்கும் பரந்து அவற்றைத் தரித்திருப்பது. தான் உடையானாக அவற்றை எல்லாம் உடைமையாகக் கொண்டு அவ்வவற்றின் வினை நிலைக்குஏற்ப ஏவுவது. ஆனமாக கள் நுகரும் நன்மை, தீமை, மாறு பாடு இவறறால் தான் தாக்கப்படா தது. ஆன்மாக்களுக்குத் தன்னைத் தான் காட்டினால் ஒழியக் காண முடியாத தன்மையது—என்றும் நம் முன்னோர் குறிப்பிட்டுள்ளனர்.

முன்குறிப்பிட்ட இக்கருத்துக் களில் மாறுபாடோ, ஐயப்பாடோ, அறிவின்மையோ கொண்டுள்ள மக் கள் பிறப்பு இறப்பு ஆகிய துன்பங் களில் வருந்திக் கொண்டிருப்பர் என்பது பொய்யாமொழி.

' இருள் நீங்கி இன்பம் பயக்கும், மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு '
(குறள் 352)

அவிச்சையின் நீங்கி மெய்யுணாவு உடையர் ஆயினார்க்கு, அம்மெய யுணர்வு பிறப்பினைநீக்கி வீட்டினைக் கொடுக்கும்—எனபது பரிமேலழகர் உரை. இருள — பிறப்பு; வீடா வது நிரதிசய இன்பம

எனவே, அறிவின்மையின் நீங்கிய அதனாலேயே துன்பத்துக்கு ஏது வாகிய பிறப்பு நீங்க இன்பநிலை யாகிய வீடுபேறு கிட்டும் என்பதும், அறிவின்மையின நீங்காவழிப் பிறவி உண்டாய் அதனால் துனபமே அனறி இன்பம் உண்டாகாது என்பதும் பெறப்படும். இதனால் அறிவின்மை யால் ஏற்படும் தீங்கு கூறப்பட்டது.

இனி, திரிபு உணர்ச்சியும் அத் தகையதே. திரிபு உணர்ச்சியாவது ஒன்றனை மற்றொன்றாக அறிதலாம். அது கானல் நீரைத் தண்ணீர் என வும சிப்பியை வெள்ளி எனவும் பிறழ உணர்தல் போல்வதாம்.

' பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும
மருளானும் மாணாப் பிறப்பு '
(குறள் 351)

மெய்ப்பொருள் அல்லனவற்றை மெய்ப்பொருள் என்று உணரும் விப ரீத உணர்வாலே இனபம் இல்லாத பிறப்பு உண்டாகும்.

விபரீத உணர்வாவது மறுபிறப் பும், இருவினைப் பயனும், கடவுளும இல்லை எனவும் கூறுதலும், ஆனமா தான் அல்லாத பொயப்பொருளாம் உடலைத் தான் என்று அறிதலும், இறைவனுக்கு உடைமைப் பொரு ளாகிய தன்னை இறைவனாகவே உணர்தலும், இறைமைக்குணம் இல் லாரை இறையாகவே கோடலும் போல்வன. நரகர், தேவர், மக்கள, விலங்கு என்ற நாலவகைப் பிறப்பி னும் உள்ளது துன்பமே ஆதலான், திரிபுணர்ச்சியால இன்பமே இல்லா தது துன்பத்துக்கு ஏதுவாகிய பிறவி உண்டாம் என்பது. இதனால் திரி புணர்ச்சியால் ஏற்படும் தீங்கு கூறப் பட்டது.

இங்ஙனமே ஐய உணர்வும் பய னற்றது. ஐய உணர்வாவது பழு தையோ பாம்போ, பேயத்தேரோ தண்ணீரோ என ஒன்றில் நிலை கொள்ளாது பல தலையாய நினைவு கொள்ளும் உணர்வாகும்.

' ஐயத்தின் நீங்கித் தெளிநதார்க்கு, வையத்தின்
வானம நணிய துடைத்து
(குறள் 353)

ஐயத்தினின்றும் நீங்கி மெய் உணர்நதார்கரு அவர்கள் எய்தி நின்ற நில உலகததினும் எய்தக் கட வதாகிய வீட்டுலகம் நணிததாதல் உடையது.

எனவே அவர்களுககு வினையான் நிகழும் பிறப்பு முதலாகிய துன்பங் களை நுகர்விககும் இவ்வையத்தை நீப்பதும, பேரின்பம் ஊட்டும் வீட்டுவகை அடைவதும் எளிய செயல்களாம். நீங்க வேண்டிய இவ்வுலகம் சேய்மையதாகவும், எய்த வேண்டிய வீட்டுலகம் அணிய தாகவும் அவாகளுக்கு அமையும். எனவே, ஐயத்தின் நீங்காவழி வையம் நீப்பதும், வீடு அடைவதும் இல. ஆதலின் ஐய உணர்வும் பிறப்புக்கு ஏதுவாய் துன்பம் தரும் என்பதாம்.

அறிவின்மை, ஐயம், திரிபு.என்ற மூவகை அறிவின்மைகளும், ஆன் மாக்கள் நீப்பதே பயனான பிறவி யும், முகப்பதே பயனான பேரின்ப மும் எய்தாவகைத் தடையாகலின், இவறறை நீத்தாலன்றி வேறு திறன் கள் மிகப் பெற்றிருப்பினும் அவை பயனிலவாம்.

' ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு '
(குறள் 354)

புலன்கள வேறுபாட்டால் ஐந்தா கிய உணாவு அவற்றை விடுததுத் தம் வயத்ததாகிய வழியும் மெய் யுணர்வு இல்லாதவர்க்கு அதனால் பயன் இன்று ம. ஐந்தாகிய உணர்வு மனம. மனம மடங்கி ஒரு தலைப்பட்டுத் தாரணைககண் நின்ற வழியும் வீடு பயவாமையின் பயன் இன்று என்பதாம்.

உயிருக்கு உரிய பயனாகிய வீடு பேறு மெய்யுணர்வு உடையார்க்கே

# செய்திச் சுருக்கம்

**பரிசளிப்பு விழா :**

தி. தி. தேவஸ்தான மேலாண்மை அண்மையில் நடத்திய வருடாந்திர விளையாட்டுப் போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. இதனை ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு தி.தி.தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் திரு. பி. யாதகிரி எம்.எல்.சி. அவர்கள் தலைமை வகித்து உரையாற்றுகையில் தி. தி. தே. ஊழியர்களின் நலனுக்காக மேலாண்மை மேலும் பல திட்டங்களை மேற்கொள்ள வேண்டும் என்று கூறினார். வெற்றி பெற்றவர்களுக்கு தி. தி. தே கல்வி அலுவலர் பேராசிரியர் பி.சந்திரசேகர நாயுடு அவர்கள் பரிசுகள் வழங்க, திரு. பி. பாலகிருஷ்ணா அவர்கள் நன்றி நவின்றார். இவ்விழாவில் தி. தி.தே. பொது ஜனத்தொடர்பு அலுவலர் திரு. ஆர். சூர்ய நாராயண மூர்த்தி அவர்களும் பங்கேற்று உரையாற்றினார்.

**அடிக்கல் நாட்டு விழா :**

ஆந்திர மாநிலம் அதிலாபாத் மாவட்டம் மஞ்சரியாலாவில் கட்டப்படவிருக்கும் தி. தி. தேவஸ்தானத்தாரின் திருமண மண்டபத்திற்கு தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் திரு. பி. யாதகிரி அவர்களால் அடிக்கல் நாட்டப்பட்டது. தி. தி. தே. பொதுஜனத்தொடர்பு, அலுவலர் இவ் அடிக்கல் நாட்டு விழாவின்போது உரையாற்றுகையில், இதுவரை ரு. 1.9 கோடி செலவில் பதின்மூன்று திருமண மண்டபங்களும் பதினெட்டு சத்திரங்களும் தி.தி.தேவஸ்தானத்தாரால் கட்டப்பட்டன என்றும், ரு. 7.25 கோடி செலவில் 62 திருமண மண்டபங்கள் கட்டப்பட்டு வருகின்றன என்றும் குறிப்பிட்டார். தி. தி. தே. உதவி செயற் பொறியாளர் திரு. பி. மோகன கிருஷ்ண அவர்கள் நன்றி நவின்றார்

**திருப்பதி குடை ஊர்வலம் :**

வருடாந்திர திருப்பதி குடை ஊர்வலம் சென்னையில் 1-9-84 அன்று காலை, சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி திரு. கே. ஷண்முகம் அவர்களின் முன்னிலையில் புறப்படும். 22-9-84 அன்று நடைபெறும் இறுதி பூஜைக்குப் பிறகு, இவ்வூர்வலம் 23-9-84 அன்று சென்னையிலிருந்து புறப்பட்டு, 30-9-84 அன்று, திருமலையை வந்தடையும். அன்று நடைபெறும் கருட சேவையின் போது, ஸ்ரீவேங்கடேஸ்வரருக்கு இவ்வூர்வலக் குடைகள் அளிக்கப்படும்.



*அண்மையில் தி தி. தேவஸ்தான மாட்டுப்பண்ணையில் பசு பூஜை நடைபெற்றது. இதனை ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு மாதாஜீ சாரதா பிரியானந்தா அவர்கள் சிறப்பு விருந்தினராக பங்கேற்று உரையாற்றினர்,*

---

உண்டு. மெய்யுணர்வு ஒன்றுதான் ஆன்மாவுக்கு உரிய பயனைச் சாதிப்பது. அதனை ஒழிய மற்று யாது பெற்றும் பயன் இலதாம் என்பது வள்ளுவர் திருவுளளம்.

இதுநாளும் சான்றோர் அருளுரை கொண்டு ஆய்ந்தவாற்றால், 'ஆன்மா எடுக்கும் பிறப்பினுள் மனிதப் பிறப்பே சிறந்தது, இப்பிறப்பெடுத்த ஆன்மா துன்பத்துக்கு ஏதுவாகிய பிறப்பை உணர்ந்து அதனின் நீங்கி வீடு எய்தின் இன்பமாகிய நன்னிலை உண்டு. அறிவின்மை காரணமாகவே பிறவி வருவது, அது நீங்கி மெய்யுணர்வு பெற்ற வழியே பிறவி நீங்கி வீடு எய்தலாம், அதற்கு இறையருள் முகத்தலே சாதனம்' என்று உணர்கிறோம்.

'சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரும் நோய்'
(குறள் 359)

எல்லாப் பொருட்கும் சார்பாய செம்பொருளை உணர்ந்து, இருவகைப்பற்றும் அற ஒழுக வல்லனயின் அவனை முன்சாரக்கடவனவாகிய துன்பங்கள் அவ்வுணர்வு ஒழுக்கங்களை அழித்துப் பின் சாரமாட்டா — ஆதலின் இறையருள் முகத்தலே ஆன்மாவுக்கு உரிய இன்றியமையாத செயலாகும். இதற்கு இறைநிலை அறிந்து இறைவழிபாடு ஆற்ற வேண்டும் என்பது மனிதப் பிறவியில் பிறந்த ஒவ்வொருவருக்கும் இன்றியமையாதது என்ற வேண்டற்பாடு விடுத்து அமைகின்றனம்.

அன்னமாச்சார்ய கீர்த்தனம் (தெலுங்கு)
இசை மெட்டு : திரு ஜி. பாலகிருஷ்ண பிரசாத்
ஶுத்த ஸாவேரி ராகம் - ஆதி தாளம்.

ப:- ;, ஸாரிமா பதஸ்ஸ்ததபப | மா பதா ஸ்தா | ஸ்ா ; ஸ்ாஸ்ா ||
வீ துல வீ துல | விபுடே | கீ ளிதெ ||
;, தரிஸ்ஸ்ா ஸ்தரிஸ் தபபம | மரீ ரீ த த ப | பம ரிமா ரிஸ ஸா ||
மோ த மு தோ ரு த | மொக்கரோ | ஜனு லு ||

ச:- ; ததாதா தாதஸ்தப தத | பம மபாதபா | தா ; தாதா ||
கரு ட த்வ ஜ ம தே | கன கர | தம் ப தெ ||
; தரீஸ்ஸ்ா ஸ்தரிஸ் தபபம | பம பதாஸ்தா | ஸ்ா ; ; ; ; ||
அர த மு லை ஹ ரி | அல வா | டே ||
தஸ்ா ரிரீரீ ரீரீரீ | ; ஸ்ாரிஸ்தா | ஸ்ாஸ்ா ரீ ; ||
இரு தெலலனுன்னாரு | ; இந்திரயு | புவி யு ||
; தரீஸ் தா ; தஸ் தபபம | மரி, ரீத தப | பம ரிமா ரிஸ ஸா ||
பரக பக்க மு லு | பட்டரோ | ஜனு லு ||

ச:- ; பா, பா, பாதஸ் பதாப | ;, பாதபா | மரிஸரிம மமா ||
ஆ டே ர தி வோ | அச்சர | லெல் லரு ||
ரீமஸரிஸஸா பா, பா, தப | பம பதா ரிஸ்ா | தஸ்தஸ்பதாப ||
பாடே ரு கந் தர் வ | பது லெல் | ல ||
; மபாததா ஸ்ா, ஸ்ா, ஸ்ா | ; தா, ஸ்ா | ரீதா ஸ்ாஸ்ா ||
வே டுக தோ வீ டெ | விஷ்வக் | ஸே னு டு ||
; தரிஸ்தா ; தஸ்தபபம | மரீ ரி த த தப | பம ரிமா ரிஸ ஸா ||
கூடி இந்த ரு னு | கொலுவரோ | ஜனு லு ||

ச:- ; ஸ்ா, ஸ்ா, ஸ்ாஸ்ா ஸ்ாஸ்ா | ; ஸ்ஸ்ா ரிதா | ஸ்ா ; ஸ்ாஸ்ா ||
ஶ்ரீ வேங் க ட ப தி | ஶிக ரமு | சா ய தெ ||
தா ரிஸ்ா, ஸ்ா ஸ்தரிஸ் தபபம | பம பதாஸ்தா | ஸ்ா ; ; ; ||
பா விம் ப பஹு லை | பவ முல | வே ||
தஸ்ா ரீ, ரீ ரீ ; ரீரீ | ; ஸ்ரீஸ்தா | ஸ்ாஸ்ா ரீரீ ||
கோ விந்த நாமபு | கோஷண | லி ரு சனு ||
; தரீஸ்ா, ஸ்தரிஸ்தபபம | மரீ ரிதத தபபம | ; ரிமா ரிஸ ஸா ||
தைவம் பி த டனி | தலசரோ | ஜனு லு ||

Edited and Published on behalf of the T. T. Devasthanams by K. Subba Rao, M.A., and Printed at T.T.D. Press
by M. Vijayakumar Reddy, L.P.T., Manager, T.T.D. Press, Tirupati

